உ

திருவருள் முன்னிற்க.

வக்கீல் பண்டாரம்பிள்ளை என்னும்

திருவாளர்

தி. செ.

# சுப்பிரமணியபிள்ளை

அவர்களின்

# சரித்திரச்சுருக்கம்.

திருநெல்வேலி,

இந்துகலாசாலை தமிழாசிரியர்

மு. பொ. ஈசுரமூர்த்தியாபிள்ளை

அவர்களால்

இயற்றப்பெற்றது.

மீரானியா அச்சுக்கூடம்
திருநெல்வேலி.
1924

# தி. செ. சு. சரித்திரம்

# முகவுரை.

---

அன்பர்காள்!

இச்சரித்திரம் நான் எழுதும்படி நேர்ந்ததின் காரணத்தை முதலில் தெரிவித்துக்கொள்வது நன்றாம். திருவாளர் தி செ. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் பரகதி அடைந்த பதினாறாம் நாளில், பகலில் நடக்கவேண்டியன முறைப்படி நடந்தேறியபின், இரவில் "நன்மைக்கிருத்தல்" ஆனவுடனே அங்கு குழுமியிருந்த சுற்றத்தார்களிற் சிலர் "இந்தச்சமயத்தில் யாராவதுகாலஞ்சென்றவரது வரலாற்றைக்குறித்து 'சுருக்கமாய் எடுத்துரைத்தல் பொருத்தமாயிருக்கும்" என்று சொன்னார்கள் அப்படியே மற்றவர்களும் விரும்பினார்கள். இச்சரித்திரத்தலைவரின் தம்பியாராகிய திருவாளர் தி. செ. விசுவநாதபிள்ளையவர்கள் B. A., அக்கடமையைச்செய்யும்படி என்னைத்தூண்டினார்கள். அத்தருணத்திற்கேற்ப அரைமணிக்குள் அமையும்படி நண்பர் வாழ்க்கையின் இயல்நயம்பற்றி ஒருவாறு சொல்லிமுடித்தேன். அப்பால் அக்குடும்பத்தவர்கள் ஷை சரித்திரத்தைக்கூடிய சாவகாசத்

தில் முழுதும் விளக்கமாய் எழுதித்தரல்வேண்டு மென்று என்னிடத்தில் கேட்டுக்கொண்டார்கள். இதுசெய்தி அறிந்த சரித்திரத்தலைவரின் மனைவி யார் தம்தலைவரது சரித்திரத்தை சீக்கிரத்தில் எழுதுவித்துக்கேட்கவேண்டுமென்ற பேராவ லுடையராயினர். ஆயினும், சரித்திரத்திற்கு வேண்டிய காலக்குறிப்புகள் முதலியன கிட்டுவ தரிதாயிருந்தபடியாலும், தம்அகமுடையாரை அடிப்பிடித்த அம்மையார் ஆயுள் குறுகிவிட்ட படியாலும் அவர் எண்ணம் நிறைவேருமற் போயிற்று. அங்ஙனம் போனதுபற்றிப் பெரி தும் வருந்தலுற்றேரும். அதனால் என் ஊக்கம் தளர்வுற்றது. இடையில் இப்படிச் சில ஆண்டு கள் செல்லாயின. ஆயினும் என் கடமையை யான் மறந்தேன் அல்லேன். இத்தலைவரும் யானும் சுமார் 40 ஆண்டுகளாக நெருங்கிய நட் பினராயிருந்துவந்ததைக் கருதியும், நண்பரின் அருமை மக்கண்மார் என்னை அடிக்கடி தூண்டிக் கொண்டிருந்ததையுணர்ந்தும், நண்பரின் சரித் திரம் எழுதக்கருதிய செய்தியைப் பெருந்தகை யாளர் சிங்கம்பட்டிச்சமீன் துரையவர்களிடம் நேரில் தெரிவித்தபோது, அவர்கள் அன்போடு ஆதரித்துப்பேசி, "சமஸ்தானத்திலிருந்து அத ற்குவேண்டும் உதவிபுரியலாம்" என்று என்னை

ஊக்கப்படுத்தியதை உன்னியும், இச்சரித்திரத்தை, எத்துணை இடர்ப்பாட்டிற்குட்படினும் சலியாது எழுதி முடித்திடல்வேண்டும் என்று துணிவுற்றேன். திருவருளால் ஒருவாறு முற்றுப்பெற்றது.

இப்பால், இதில் என்அநுபவ அறிவை வெளியிடுகிறேன். உண்மைச்சரித்திரம் எழுதுவதில், எழுதப்பட்ட ஆதாரவுகள் எதுவும் கிட்டாத நிலைமையில், பலரிடம்சென்று சமயம் அறிந்து உசாவி உண்மைச்செய்திகள் தெரிந்து தேர்ந்து கொள்வதில், சரித்திரத்தில் தொடர்புடையார் பலரும், சரித்திரச்செய்திகளில் சிற்சில தெரிந்துள்ளவர்களும், இப்பொழுது எம் உடன் வாழுநராயிருத்தலின் இன்னோரில் எவருக்கும் மனக்குறை ஏற்படாமலும் ஒவ்வொருவரும் ஒப்பத்தக்கதாகவும் நிகழ்ந்த செய்திகளை உள்ளபடியே அச்சிட்டு வெளியிடுவதில் எத்துணையிடர்ப்பாடுகள் நேரிடும் என்பது இதில் முயன்று உழைத்துப்பார்த்தபின்புதான் எனக்குத்தெரியவந்தது.

இனி, நான் நேரில் ஒருவாறுதெரிந்துவைத்திருந்த காரியங்களில் அநுமானவகையும் சேர்த்து முற்றுறஎழுதி வெளியிட்டிருக்கிற என்

கருத்துகள் (அபிப்பிராயம்) சரிதானு என்று தெரிந்துகொள்ளும் பொருட்டு தலைவரோடு அவ் வக்காரியங்களில் தொடர்புற்றிருந்தோர் இடங்கள் தோறும் சென்று, அவரவர்க்கு உரியபாகங்களை வாசித்துக்காட்டியபோது அன்னோர் முற்றிலும் சரி என்று ஒப்புக்கொண்டு என்னை மகிழ்வித்தார்கள். அன்னோருள் சிலர் பெயரை இங்கு குறித்திடல் பொருத்தமாகும். திருவாளர்கள் தி. செ. விசுவநாதபிள்ளையவர்கள் B. A., ஆழ்வார்குறிச்சி துரைசாமிபிள்ளையவர்கள், மா. திரவியம்பிள்ளையவர்கள், வக்கில் P. M. கைலாசம் பிள்ளையவர்கள், B. A. வக்கீல் சடகோபபிள்ளையவர்கள், பேருரணி மிட்டாதார் நெல்லைநாயகம் பிள்ளையவர்கள், V. P. சுப்பிரமணிய முதலியாரவர்கள், சாலிவாடி காந்திமதிநாதபிள்ளையவர்கள் B. A. கவிராஜ ஈசுரமூர்த்தியாபிள்ளையவர்கள்.

இனி இச்சரித்திரத்தலைவருடன் பற்பலசமயங்களில் நான் நேரில் அளவளாவி அநுபவித்தறிந்த செய்திகள் பலவுள என்பது சரித்திரத்தில் பல இடங்களில் காணப்படும். இதுவே இச்சரித்திரம் எழுதும்படி என்னைக்கேட்டுக் கொள்வதற்கும், நான் உடம்படுவதற்கும் முக்கியகாரணமாயிருந்தது.

இந்நூலில் சில இடங்களில் வடமொழி முதலிய பிறமொழிகலந்திருப்பதை மன்னிக்குமாறு தூயதனித்தமிழ்ச்சுவையுணர்ந்த செந்தமிழ்ப்புலவர்களிடத்திலும், நாடோடிக்கலப்புத் தமிழ்வழக்கில் இல்லாத செந்தமிழ்ச்சொற்களை பலஇடங்களில் வழங்கி இருப்பதை மன்னிக்கும்படி மற்றவர்களிடத்திலும் பணிவுடன் கேட்டுக் கொள்கிறேன்.

இச்சரித்திரத்தைக் கையெழுத்தேட்டில் பார்வையிட்டு வேண்டும்சீர் திருத்தங்கள் செய்து உதவிய திருவாளர் T. K. சிதம்பரநாத முதலியார் (B. A., B. L.) அவர்களுக்கும் இச்சரித்திரத்தில் சிங்கம்பட்டிச்சமீன் சார்பாகத்தெரிய வேண்டிய முக்கியகுறிப்புகள் கொடுத்து உதவிய திருவாளர், மா. திரவியம்பிள்ளையவர்களுக்கும், இதனை அச்சிடுவதில் பெரிதும் உதவி புரிந்த சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழக அமைச்சர் திருவாளர் திருவரங்கம்பிள்ளையவர்களுக்கும் என் அன்பார்ந்த வந்தனங்களும், என்றும் மறவாத நன்றியுணர்வும் உரியனவாம்.

இனி, இச்சரித்திரத்தொடக்கத்திற்காணப்படும் குடும்பவரலாறு, பிறப்பு, வளர்ப்பு, கல்வி,

திருமணம், ஆகிய ஐந்து பிரிவுகளிலும் விளக்கப்பட்டிருக்கிற செய்திகளில் பெரும்பாலன சரித்திரத்தலைவரின் தந்தையாராகிய திருவாளர் தி. சு. செல்லம்பிள்ளையவர்களின் மூன்றாவது மனைவியாராகிய திருமகள் லெட்சுமி அம்மையாரின் வாக்கு மூலமாகக்கிடைத்த பேருதவியால் நன்குணர்ந்து எழுதற்பாலனவாயின. ஆயினும் இவ்வம்மையாருக்கு யான் வந்தனம் அளிக்கக் கடமைப்பட்டிலேன். இதற்குக்காரணம் சொல்லாமலே விளங்கும். இனி முன்னுரையருளிய இலக்குமணப்போற்றியடிகள் தமிழ் உலகிற்குச் செய்துவரும் நன்மை மழைபோல்வதாகையால் பாராட்டியுரைத்தல் மிகையாம்.

மன்னுயிர் வாழ்க்கையின் மெய்ச்சரிதம் தமிழில் அரிதாயிருத்தலால் இச்சிற்றுரை நூலிற் குற்றம்நாடி எனக்கு உணர்த்தியருளும் அன்பர்களுக்கே பெரிதும் கடப்பாடுடையேனாவேன்.

| | |
|---|---|
| ஜனவரி 1924<br>அன்பகம்,<br>முன்னீர்பள்ளம் | மூ. பொ.<br>ஈசுரமூர்த்தியாபிள்ளை. |

# முன்னுரை.

---

ஒரு மனிதனது வாழ்நாளின் மதிப்பு அவன் வாழ்வுற்றகாலஅளவைப் பொறுத்த தன்று; அவன் தன் வாழ்நாளில் செய்துள்ள காரிய நலங்களின் அளவைப்பொறுத்ததாகும். உலகோபகாரமாகத்தக்க காரியம் ஒன்றையேனும் செய்யாதவன் ஜீவித்தவன் ஆகான். ஆகவே உலக நன்மை புரிந்தவரே நமது உரிமைக்குப் பாத்திரமாகுவர். அன்னாரின் வாழ் நாள் நிகழ்ச்சியைப்பற்றி அறிவது நமது கடமையாகும். அவரது நல்லொழுக்கம் நம்மைச் செம்மைப்படுத்துவதற்குரிய கருவியாகும்.

மனிதன் குறையுடையவனே. "அரியகற்று ஆசற்றார்கண்ணும்—இன்மை அரிதே வெளிறு" என்றார் நமது திருவள்ளுவர். பிறரது குறையை அறிவதால் நமது குறையை ஒத்து நோக்கி நமது மனசை ஆற்றிக்கொள்ளலாம். ஆனல் பிறரது குணபாகத்தைத் தெரிந்துகொள்வதால் நமக்கு நன்னெறியில் ஊக்கமுண்டாகும். ஒரு அற்பன் ஒரு அறிஞரிடம் சென்று ஒரு மகானைப் பற்றிக் குறைகூறினன். அந்த அறிஞர் அந்த

மகானிடத்தில் தாம் கண்டுள்ள குணப்பெருக்கி
ஞல் அக்குறை தமக்குத் தோன்றவில்லையென்று
அந்த அற்பனுக்குத் தக்க விடை பகர்ந்தனர்.
"குணம் நாடி, குற்றமும் நாடி அவற்றுள் மிகை
நாடி மிக்க கொளல்" என்ற திருக்குறட் கருத்
தையும் ஆராய்க. இவ் உண்மையைத் தழுவி
இச்சரித்திரம் எழுதப்பட்டுள்ளது.

இச்சரித்திரம் உடையார் ஆகிய திருவாளர்
செ. சுப்பிரமணியபிள்ளையவர்களது கூரிய புத்
தியும், சீரிய கல்வியும், ஆழ்ந்த கருத்தும், அநு
பவ ஞானமும், சஹநசீலமும், சாந்த குணமும்,
சமய யுக்தியும், சாதுர்ய மொழியும், உபாய
உணர்ச்சியும், உபாயச் சூழ்ச்சியும் குடும்ப நிர்
வாஹமும், குறையுளார்க் காப்பும், ஒழுக்க நல
னும், ஒழுக்கப் பயிற்சியும், பொதுநலப் பிரிய
மும், பொது நல ஊக்கமும், புதுமை விருப்பும்,
புதுமை அமைப்பும், நிலப்பொருள் ஈட்டும்,
நிறைவுறு சக்தியும், காரிய சித்தியில் கருத்துறு
திறனும், இருபகுப்பினரையும் இணக்குறு நல
னும் சாலவியக்கத்தக்கனவாம். (Emerson)
எமர்ஸன் முதலிய பெரியாரது கருத்துகளை ஆங்
கிலத்தில் அனுதினமும் பயின்றுணர்ந்த முதிர்ச்
சியிஞல் இலெளகீக நிர்வாஹத்தில் இவர்கட்
கிணை கூறத்தக்கவர் ஈங்குமிகச் சிலரே யாவர்.

இந்நூலாசிரியர் மேற்குறித்த கனவானது சிறந்த குணங்களை யெல்லாம் பழுதற உள்ள வாறே நன்குவிரித்துரைத்திருக்கின்றனர். "அன்பிலார் எல்லாம் தமக்குரியர்" என்னும் இலக்கணம் அமைந்த இழிதகைமையும், "அன்புடையார் என்பும் உரியர் பிறர்க்கு" என்னும் இலக்கணம் அமைந்த பெருந்தகைமையும் ஒருபுறம் இருப்ப, இஃவாழ்வார் யாவரும் இயற்றக் கடமைப்பட்டுள்ள பொது நலத்திற்குரிமை வாய்ந்த தன்னலப்பண்பைத் தெளிவுபட இந்நூலில் விளக்கியிருக்கின்றனர். மேலும் இச்சரித்திரம் உடையாரது உற்றார் உறவினர் மட்டுமென்றி யாவரும் படித்துப் பயனடையுமாறு இந்நூலில் சாதிவரலாறு சமய உண்மை முதலிய பொது நீதிகளும் உணர்த்தப்பட்டுள்ளன. இதனைக் கற்பவர் இல்வாழ்க்கை நடை முறைகளில் நன்கு பழகிக்கொள்வாராவர்.

இந்நூல், உண்மையான ஜீவன சரிதம் இந்தியாவில் இல்லையென்னும் பெருங்குறையை ஒருவாறு நிவிர்த்திசெய்கின்றது. இந்நூலை வெளியிடுதற்குக் காரணராயுள்ள குடும்பஸ்தரும், நூலாசிரியரும் என்றும் வாழ்க.

இலக்குமணப்போற்றி
தச்சநல்லூர், திருநெல்வேலி.

# பொருள் அட்டவணை.



| பொருள் | | பக்கம். |
|---|---|---|

உ

திருவருள் முன்னிற்க.

திருவாளர்.

# தி. செ. சுப்பிரமணியபிள்ளை

## யவர்களின் சரித்திரச் சுருக்கம்.



## காப்பு.

### வெண்பா.

உண்மையன்றி யாதும் உரைத்தறியோம் இந்நிலையில்
வெண்மணியின் மெய்ச் சரிதம் விள்ளுதற்கே—கண்மணிக்கு
விண்மணிபோல் உண்மை விளக்கும் பரம்பொருளை
எண்ணியருள் எய்துவோம் யாம்.

## 1. குடும்ப வரலாறு.

இச்சரித்திர நாயகர் பிறந்த நாடு நகர முதலியவும் குடும்ப வரலாற்றில் நமக்குத் தெரிந்த அளவில் முந்திய மூன்று தலை முறைத் தந்தையோர்களின் கொடி வழிப் பெயர்களும் முதலில் வெளியிடுவோம்.

பலவகை இயற்கை அரண்களுடன் நில வளம் நீர்வளங்களும் அமையப் பெற்ற இயற் கைச் செலவ வள நாடாகிய பரதகண்டத்தின் தெற்கோரமாகிய பண்டைத் தமிழ் நாட்டிலே வேளாண் மாந்தர் மரபிலே பரம்பரைச் சைவ நெறியுடையார் குழாத்திலே இச்சரித்திர நாயகரது தந்தையின பாட்டனர் திருவாளர். ஆவுடையப்பபிள்ளை யென்னும் பெயரால் விளங்கினர். இவருக்கு மூன்று புதல்வர்கள் இருந்தார்கள். சுப்பிரமணிய பிள்ளை (1) கைலா சம்பிள்ளை (2) தெய்வநாயகம்பிள்ளை (3) இம் மூவருள் முதல்வராகிய சுப்பிரமணிய பிள்ளைக் குப் புதல்வர் இருவர். ஆவுடையப்பபிள்ளை (1) செல்லமபிள்ளை (2) இவ்விருவரில் இளையவரா கிய செல்லம்பிள்ளை அவர்கள் தான் இச்சரித்திர நாயகராகிய திருவாளர். சுப்பிரமணியபிள்ளை யவர்களின் தந்தையார்.

இவர் திருநெல்வேலி அக நகரிலே (கஸ்பா) கீழப் புதுத் தெருவிலே குடியிருப்புடையார். "குப்பகுறிச்சிச் செல்லம்பிள்ளை" என்று இவர் பெயர் மிகச் சிறப்பாய் வழங்கிவரலாயிற்று. இவருடைய இயற்கைக் குணமும், ஒழுக்கமும், விநயமும் விரும்பத் தக்கவை. இவருக்கு முத

லாவது திருமணம் திருநெல்வேலிக்குத் தென் கிழக்கில் 2 மைலிற்குள்ளிருக்கிற மேலப்பாளை யத்தில் நடந்தது. மணமகள் பெயர் பேச்சி யம்மை. இவ்வம்மையார் வயற்றிற் பிறந்த திருமகனார்தான் இச்சரித்திரத்திற்குரியநாயகர்.

## 2. பிறப்பு.

மேற் சொல்லிய மேலப்பாளையத்திலே பேச்சியம்மையாரின் பெறரோர்க்குச் சொந்த மாகிய பழைமையான ஒரு சிறு வீட்டிலே 1031—ம்ஸு வைகாசித் திங்கள் 11—ம் நாள் வியாழக்கிழமை மூலநக்ஷத்திரத்தில் நம் திருவாளர். குப்பகுறிச்சிச் செல்லம்பிள்ளை யவர்களுக்கு ஆண்குழந்தை பிறந்தது. சுற்றத் தார் யாவரும் ஆனந்தமாயினர்.

"பிறப்பொக்கும எல்லா வுயிர்க்கும் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமையால்."

## 3. வளர்ப்பு.

ஆயினும், அந்தோ! பரிதாபம்! பரிதாபம்!! குழந்தை பிறந்த ஏழாம் நாளிலே பெற்ற தாய் பரகதி அடைந்தாள். பெற்றவளைப் பெற்ற பெருமாட்டிக்கு இவள் ஒரே மகள்; ஆண் சந்

ததியில்லை. ஆகையால் பிறந்த ஏழாம்நாளில் தள்ளையை இழந்தபிள்ளையின் நிலைமையினும், மகளை இழந்த மாதாவின் துயரம் மிகவும் கொடியதாயிற்று. ஆதலினாலே பிறந்த குழந்தையை மிகவும் சிரத்தையோடு கவனிக்கவேண்டியவளாகிய தாய்க்குத் தாயாகிய பாட்டியாள் தன் மகளை பறிகொடுத்த ஏக்கத்தினால், துன்பத்தின் மூழ்கினவளாய் பேரனைப் பேணிப் பார்ப்பதில் சிந்தையற்றவளாய் இருந்தாள். நமது கண்மணியின் தாயைப் பெற்ற பேர்த்தியாரின் நிலைமை இப்படியாயிற்று. தந்தையைப் பெற்ற பேர்த்தியாளோ அப்போது இப்பூமியிலில்லை என்றாலும், திருவருளால் ஒரு வழி ஏற்படலாயிறறு. தந்தையின் சிறிய தாயாராகிய சண்முகத்தம்மாள் சில காரணங்களால் இக் குழந்தையினிடத்தில் பற்றுடையவளாய் சிரத்தையுடன் குழந்தையைப் பாதுகாத்துவளர்த்து வருவாளாயினாள். இம் மைந்தனுக்குத் தந்தையின் தந்தையராகிப பேரனார் சுப்பிரமணி (வெண்மணி) என்னும் பிள்ளைத் திருநாமம் அமைந்தது.

அப்பால், இத் தாயில்லாக் குழந்தையின் பிதா செல்லம்பிள்ளை அவர்களுக்கு இரண்டா

வது திருமணம் நிகழ்ந்து பேத்தையாபிள்ளை யென்னும் பெயரால் ஒரு புதல்வரும் அப்பால் இரண்டாவது மனைவி காலஞ்சென்றபின் மூன்று வது திருமணமும் முடியப்பெற்றது. இயற்கை யறிவிலும் சிறந்த இவ்வம்மையார் பெயர் லெட் சுமியம்மாள்.

இவர்பால் புதல்வர் ஒருவரும், புதல்வி ஒருத்தியும் தோன்றியிருக்கிறார்கள். இப்புதல் வர் பெயர் விசுவநாத பிள்ளை B. A. இவர் பல ரும் தெரிந்து கொள்ளவேண்டிய சிறந்த கொள் கையும், அரிய செய்கையும் உடையவர். இவ ருடன் பிறந்தவள் பெயர் தாயம்மாள். இது நிற்க.

## 4. கல்வி.

குழந்தை பிறந்த ஊராகிய மேலப்பாளை யத்திலே பேரனார் வீட்டிலே வளர்ந்துவந்த படியே அவ்விடத்திலேயே ஒரு திண்ணைப் பள்ளிக்கூடத்தில் தமிழ் படிக்கத்தொடங்கினார். அங்கே ஆங்கிலப் பள்ளிககூடமும் அதன பின் எறபட்டிருந்தது; அதிலே சிலகாலம் ஆங்கில மும் கறறுக்கொண்டிருந்தார். இவ்வாசிரியரை அந்நாளில் நேரில் கண்டுள்ளோம். மேற்படி

பள்ளியில் ஆங்கிலப் படிப்புக்காக முன்னீர்ப்பள்ளத்திலிருந்தும் சில மாணவர்போய் வருவதுண்டு. அவருட் சிலர் இவ்வாசிரியர்க்குத் தோழர் என்னத்தகக வயதும் வளர்த்தியும் உடையார். ஆசிரியரும் மாணவர்களின் பருவத்திற்கிணங்குமாறு அவர்களை நடத்தி தற்காத்து நிர்வகித்து வந்தார். இது செய்தி நமது வென்மணியாகிய சிறு மாணுக்கருக்கு பின்னுல் பெரிதும் பயன்படத்தக்க நல்ல பாடமாய் அமைந்துள்ளது என்பஃது பின் வரும் பகுதியில் ஓரிடத்தில் தெரியவரும். அது கருதியே இங்கே இதைப்பற்றிச சிறிது விரித்துரைக்க வேண்டியதாயிற்று.

மேற்சொல்லியபடி மேலப்பாளையம் பள்ளிக்கூடத்தில் சுமார் பத்து வயதுவரை படித்து வந்தார். அப்பால் திருநெல்வேலிக்கு வந்து தாதையாரின் பாதுகாப்பில் அமர்ந்து படிக்கத் தொடங்கினர். ஆங்கிலமும் தாய்மொழி (தமிழ்) யும் பயிலும் கல்விச்சாலை (Anglo Vernacular School) யில் (அதுதான் வளர்ந்து இப்பொழுது "இந்து கலாசாலை, திருநெல்வேலி" என்னும் பெயர் பெற்றிருக்கிறது) சேர்ந்து கொண்டார். ஒவ்வொரு வகுப்பிலும் முதல் (உத்தம) மாணுக்

கரில் ஒருவராயிருந்து ஒருபோதும் தவறுத லின்றி ஆண்டுதோறும் ஒவ்வொரு வகுப்பு மேலே சென்று 16-வது வயதில் "பிரவேச பரீட்சை" (Matriculation) யில் தேறினர்.

## 5. தொழில் (உத்தியோகம்.)

அப்பால் 17-வது வயதில் முதலாவதாக 17 ரூபாச் சம்பளத்தில் தாம் படித்த கல்விச் சாலையிலேயே கீழ் வகுப்புகளில் ஒன்றிற்கு ஆசிரியராக நியமிக்கப் பெற்ருர். அதில் சிறிது காலம் சென்றபின் சிங்கம்பட்டி ஜமீனைச்சேர்ந்த சொத்துக்கள் சர்க்கார் மேற்பார்வையில் இருந்து வருகையில், ஷை ஜமீன் மைனர் துரைபவர் களுக்குத் தனியாசிரியராக (Tutor) நியமிக்கப் பெற்ருர். ஆனல் இவ்வாசிரியருக்கும் மாணுக் கருக்கும் வயதில் அத்துணை ஏறறத் தாழ்ச்சி யில்லை. மேலும் ராஜ சமுகம். இந்த நிலைமை யில் 18-வயதினராகிய ஓரிளைஞர் ஆசிரிய பத வியை வகித்து நிர்வகிப்பது எளிதான காரிய மன்று, "இவ்வளவு ஈடுபாடுள்ள வேலையை இவ் விளைஞர் எவ்வாறு நிர்வகிக்கக்கூடும்?" என் பதைப்பற்றி அப்போது அம்பாசமுத்திரத்தில் தாசில்தாராயிருந்த கனவான் மிகவும் சிந்தித்து

இவரிடத்தில் பெரிதும் பரிவுகூர்ந்தவராய்த் (அநுதாபம்) தமக்குத்தோன்றிய சில புத்தி மதிகளைச் சொல்லியனுப்பினர்.

இனி, இத்தனியாசிரியர், இராஜபதவியி லுள்ள முதிர்பருவமாணுக்கரை இணக்கித் தம் வசப்படுத்திச் செம்மையாகக் கற்பித்த முறை மிகவியந்து பாராட்டத்தக்கதேயாம். நம் நண்பர் அத்தகைய நிலைமையிலிருந்து கொண்டு தம்முயறசிக்குரிய தொழிற்பயனை இடையூறின்றி இனிது எய்துதற்குத் தாம் கைக்கொண்டிருந்த சில முறைகளைப்பறறிச் சில சமயங்களில் என்னிடம் சிறிது வெளியிட் டுரைத்ததுண்டு. இதில், தம்மாணுக்கருக்குத் தாம் தோழனுக அமைந்துகொண்டது முக்கியமானது. இது ஆசிரியராயிருப்பவர் எவரும் கருதிக் கைக் கொள்ளத்தக்கது. இனி, இருவரும் தோழரான நிலைமையில் ஒருவர் மீதொருவர் மிக அன்புடையராயிருப்பதற்கு எதுவுண்டாயிற்று. ஊண் உறக்கம் ஒழிந்த நேரங்களிலெல்லாம் ஒருவரைவிட் டொருவர் பிரியாதிருக்கும்படி அமைந்தது. இவ்வாறு சிலகாலம் செல்லுகையில் இவ்வாசிரியர் தம் மாணுக்கரோடு வயதில் ஒத்தவராயிருப்பினும் கல்வி அறிவில் மிகுந்தவராயிருந்தபடி

யால் உயர்ந்த பதவியுடைய தம்மாணுக்கரிடத்தில் சிறந்த செல்வாக்குடையவராயினர். ஆனது பற்றி இளவரசு எனத்தக்க தம் மாணுக்கரை முழுதும் தமக்கிணங்கச்செய்து தக்கவாறு அறிவு புகட்டி நாளடைவில் சிறந்த கல்வியாளராகுமாறு செய்வித்து வந்தார். இதனால், பொன்மகளும் சொன்மகளுமாகிய மாமியும் மருமகளும், மாறுபடாமல் ஓரிடத்திலேயே இணங்கியிருக்கும்படி செய்திட்டார். இவ்வாசிரியர் தம் மாணுக்கரைத் தோழராக மதித்து நடத்தினும், மாணவர் தம் ஆசிரியரை ஒப்பற்ற ஞானேபதேச குருவாக மதிக்கும் பண்புடைமையிற் சிறிதும் குறைவுற்றிலர். இப் பண்புடைமை மாணவர் எவரும் பரிந்து பின்பற்றத்தக்கதாம்.

## 6. திருமணம்.

இனி, இச்சரித்திரத் தலைவரின் திருமண விபரங்களைப்பற்றித் தெரிவிக்கவேண்டுவது முக்கியமாகும். இவர் நான்குமுறை மணம் செய்யும்படி நேரிட்டபடியால், இவர் வாழ்நாளில் இவ்வரலாறு மிக விரிவானது. ஆகையால் இவ்விடத்தில் முதலில் ஒருவாறு சுருக்கமாய்த் தொகுத்துத்தெரிந்து கொள்வது நன்றும். மேற்

கூறியவாறு சிங்கம்பட்டியில் ஆசிரியராயிருக்கையில் 19-வது வயதில் 1050-ம்௵ சித்திரை ௴ மேலப்பாளையம் பெண் வீரலட்சுமியம்மாளை திருமணஞ்செய்து கொண்டார். அந்த அம்மாளுக்குப் பிள்ளைகளில்லை. சுமார் ஒன்பது ஆண்டிருந்து காலஞ்சென்ருள். அப்பால் 28-வது வயதில் 1060-ம் ௵ ஆவணி ௴ 7-உ தச்சநல்லூர்ப் பெண் அருஞ்சலத்தம்மாளை மணம் புரிந்தார். மூன்று ஆண் குழந்தைகள் பிறந்தனர். செல்லம்பிள்ளை 1, துரைசாமிபிள்ளை 2, முத்துவீரப்பபிள்ளை 3. இவர்களில் துரைசாமி பிள்ளை என்பவரே எஞ்சியுள்ளார். இந்த அம்மாளும் சில ஆண்டில் சிவபதம் அடைந்தார். அப்பால் கிளாக்குளம் பெண் சங்கரவடிவு அம்மாளை மனையாளாகத் தெரிந்து கொண்டார். "தெரிந்துகொண்டார்" என்று சிறப்பித்துச் சொன்னதற்குத் தக்க காரணமுண்டு. முன், பேதை பெதும்பைப் பருவங்களில் அறிமுகமில்லாத அந்தப்புரக் கன்னிகையான ஒரு பெண்ணினுடைய குணநல முதலியவைகளைத் தெரிந்து கொள்ளுதல் எளிதன்று. ஆயினும் குல நலம் உடல் நலம் அழகு படிப்பு பணம் முதலிய காரியங்களை பிறர் பலர் மூலமாய் வெவ்வேருன வழிகளில் முயன்ருல் பெரும்பாலும்

உண்மை தெரிந்து கொள்ளக்கூடும். ஆனால் வீடடங்கி அந்தப் புரத்திலிருக்கும் கன்னிகையின் குணம் செயல்களையும் அறிவு நுணுக்க (புத்திக்கூர்மை) த்தையும் பற்றி பிறர் மூலமாய்த் தெரிந்துகொள்ளுவது அரிதினும் அரிதேயாம். ஆயினும் நமது நண்பர் இந்த முக்கியமான காரியத்தை நன்கு தெரிந்து கொண்ட முறை மிகவும் பாராட்டத்தக்கது. பெண் பார்க்கப்போகும் பெண்களுடன் ஒரு வேலைக்காரியையும் அனுப்ப வேண்டுமென்று தீர்மானித்துக்கொண்டார். குண முதலியன தெரிந்து கொள்வதற்கு உரைகற்போன்ற சில முக்கியமான கருத்துகள் அடங்கிய சிலவினாக்களை எளிதாகவும், எளிதான நடையில் விடை வருவிக்கக்கூடியதாகவும், வழக்கமான பேச்சில் வரக்கூடியதாகவும் அமைத்து அவ் வினாக்களை வேலைக்காரிக்கு நன்றாய்க் கற்பித்து கிடைக்கும் விடைகளை ஞாபகத்தில் வைத்துக்கொண்டுவந்து திரும்பத் தமக்குச் சொல்லவேண்டு மென்று கட்டளையிட்டு ஷை பெண்களுடன் இவளையும் அனுப்பினார். அப்படியே கிளாக்குளத்திற்குப் போய் போதிக்கப்பட்டபடியே தருணம் பார்த்து அப் பெண்மணியிடம் பேசிக்கொண்டிருந்து விட்டுத் திரும்பிவந்தவுடனே கிடைத்த மறு

மொழிகளை மணவாளரிடத்தில் சொன்னாள். அம் மறுமொழிகளில் அமைந்துள்ள நயங்கண்டு அப்பெண்மணி சிறந்த அறிவுடையவள் என்பது தெரிந்துகொண்டு திருமணத்திற் குரிய நாள் குறிப்பிடலாயிற்று. 1065—ம் ளூ திருமணம் நிறைவேறிற்று. அப்பொழுது பிள்ளையவர்களுக்கு வயது 34. இந்த அம்மாள் இரண்டாண்டு இனிது வாழ்ந்தபின் காலகதி அடைந்தனள். மும்முறை மனைவியாரை யிழந்த மன வருத்தத்தால் சலிப்புற்றவராய் சுமார் 2 வருடம் திருமணம் செய்துகொள்ளாது இருந்தார். அப்பால் 38-வது வயதில் நான்காவது திருமணம் நடைபெறலாயிற்று. இந்த அம்மணி பிறந்த ஊர் பத்தமடை. இம்மாதரசிக்கு புத்திக்கூர்மை முன்னையரோ டொப்பிடிற் சிறிது குறைவெனினும் சுத்தமான மனமுடையவள். இவள் தன்மையை நன்கறிந்துணர்ந்த நமது நண்பர் தம்மனைவியாரின் மனப்பாங்குக்குத் தக்கவாறு அன்பாய் நடத்திவந்தார். இவ்வம்மையார் பல மக்கட்பேறுடையவராய் இருபத்தைந்தாண்டுகளாக இல்லறமாகிய நல்லறவாழ்வில் இனிதமர்ந்திருந்தார். இவர் மணவாளரிடத்தில் மிகுந்த பற்றுள்ளமுடையவராயிருந்தார். கல்வி அறிவு சிறிதுமில்லாதவராய் இயற்கை யறிவிற

சாமானியராயிருந்தும் குடும்பப் பொறுப்பை வகித்து செம்மையாய் நடத்தி மணவாளர் அக மகிழுமாறு நடந்துகொண்டது பாராட்டிப் பேசு தற்குரியதாம். ஆயினும் மணவாளர் மனையாளை நடத்தி வந்த முறையே இதற்குமுக்கிய காரணம் எனலாம். பொதுவாகக் குடும்பக் காரியங் களில் அம்மையாருக்குச் சிரத்தையுண்டாகும் படி செய்வித்ததொன்று. தமக்குவேறு வேலை யாட்கள் இருக்கவும் தம்முடம்பிற்கு வேண்டிய வசதிகளில் சிலவற்றை மனைவியாரே செய்துத வும்படி ஏற்படுத்திக்கொண்டதும் கடவுள் வழி பாடு முதலிய தமது பூசைப் பணிவிடைகளில் தம் மனைவியார் மனம் பெரிதும் ஈடு படும்படி செய்வித்துக் கொண்டதும் குறித் தறியத்தக் கவை. தம் நாயகர்க்கு தலைக்கு எண்ணெய் இடல் சிகை சிக்கறுத்தல முதலியனசெய்வதும் பூசைக்கு வேண்டிய உதவிகளைச் செய்வதும் பெரும்பாலும் வழக்கமாய் ஏற்பட்ட கடமையா யிருந்தது. இங்ஙனம் இவர் பெருஞ்சிறப்புடன் வாழ்ந்து நாயகரின் அறுபதாவது ஆண்டு நிறை விழாவில் மறுமாலை சூடும் பெரும் பாக்கியமும் பெற்றார். இவர் பெற்ற மக்களில் ஆண் மக்கள் ஐவரும், பெண் மக்கள் நால்வருமுளர். பெயர் கள் ஆண் அருணாசலம் 1, மகாதேசன் 2, பாலய்யா

3, செல்லம் 4, வில்வநாதன் 5. பெண்: வடிவு, பாப்பு, கோமதி, செல்லம் இது நிற்க.

## 7. மேற்படிப்பு.

சிங்கம்பட்டியில் ஜமீன்தார் அவர்களுக்குத் தனி ஆசிரியராயிருந்து சிறப்புடன் நடத்திப் புகழுற்றிருக்கையில் நமது நண்பருக்கு மேற் படிப்பில் விருப்பமும் ஒரு நியாயவாதி ஆக முன் வரவேண்டுமென்ற நோக்கமும் உண்டா யிற்று. 20-வது வயதில் F. A. பரீக்ஷைக்குக் கலாசாலையில் சேராமல் தனியாகவே படித்து ஷை பரீக்ஷையில் தேறினர். அப்பால் 21-வது வயதில் வக்கீல் பரீக்ஷைக்கும் படித்துத் தேறி ஞர். வக்கீல் வேலைக்குரிய சன்னது பெற்றுக் கொண்டு வக்கீல் வேலைக்குப்போக முயன்ற போது ஜமீன்தார் முதலானவர்களுக்கு இவரைப் பிரிவது வருத்தத்திற்கு ஏதுவாயிருந்தது. அது காரணமாக, ஜமீனில் இவருக்கு எப்பொழுதும் சார்பு இருக்கவேண்டுமென்று ஜமீன்தாரவர்கள் விரும்பியபடி இவருடைய இறுதிக் காலம் வரை ஷை சமஸ்தானத்தின் ஆளுகையில் சம்பந்த முடையவராயிருந்தார்.

இவர் காலத்தில் ஜமீன் அரசாட்சியில் பல சீர்திருத்தங்கள் செய்யப்பட்டன. விபரம் பின்

ஓரிடத்தில் விளக்கப்படும். இச் சீர்திருத்தங்களால் மேற்படி ஜமீனுக்கு உண்டாகிய நன்மைகளைப்பற்றி கலெக்டர் முதலான ஜில்லா அதிகாரிகள் பலவாறு வியந்து பாராட்டியுள்ளார்கள். எழுத்துமூலமாயுள்ள சான்றுப்பத்திர நகல்களை அனுபந்தத்திற் காணலாம். மேலும், இவர் செய்த நன்றிக்கும், நட்புக்கும் அறிகுறியாக சமஸ்தானத்திலிருந்து மரியாதைப் பரிசுகள் சில அளிக்கப்பெற்றார். சமஸ்தானத்தில் சுபகாரியங்கள் நடக்கிற சமயங்களிலும் இவர் வீட்டில் நன்மைகள் நடைபெறும் காலங்களிலும் இவருக்குத் தகுதியான பரிசுகள் வழங்கப்பெறுவதுண்டு. இவரும் அவர்களுக்குச் சிற்சில வரிசைகள் செய்வதுண்டு.

## 8. தாய்மொழிப்பற்று.

இச்சரித்திரத் தலைவருக்கு இயற்கையிலேயே தாய்மொழியாகிய தமிழில் பற்றுதல் மிகுதியாயுண்டு. செயற்கையாலும் அது வளர்ந்தோங்குவதற்கு தக்ககாரணம் ஏற்பட்டிருந்தது. திருநெல்வேலி தமிழ் வித்வான் அழகிய சொக்கநாதபிள்ளையைப் பற்றிப் பலர் அறிந்திருப்பார்கள். அவர் இயற்றிய பலவகைப் பிரபந்தங்களில்

சில அழகிய சொக்கநாதர் பாடல் என சாதா ரணமாய் வழங்கிவருகின்றன. இவர் திருநெல் வேலி தெற்குப்புதுத் தெருவில் குடியிருந்தார். இவர் தகப்பனார் பெயர் வன்னியப்பபிள்ளை. விநய மாகப் பேசுவதிலும், விகடத்திலும், சிலேடைக் கவியிலும் வல்லவர். இவருக்கும் நம் நண்பருக் கும் நெடுங்காலம் தோழமையுண்டு. இருவரும் கவி நயங்களைப்பற்றி அடிக்கடி கலந்துரையாடு வார்கள். ஒருவரோடொருவர் போட்டிபோட்டு சிலேடைக்கவி பாடுவதுண்டு. இச் சொக்கர் பல சிறந்த நூல்களை இயற்றியுள்ளார். அவற் றிற் சில அவர் காலத்திலேயே அச்சிடப் பெற றிருக்கின்றன. அங்ஙனம் அச்சிடப்படாத சில வற்றில் ஒரு சிறு நூலை நமது நண்பர் நெடுங் காலம் பாதுகாத்து வைத்திருந்து தமது இறுதிக் காலத்திற்குச் சில ஆண்டுகளுக்கு முன்புதான் அச்சிட்டு வெளியிட்டார். இது திருவிளையா டற் புராணத்தில் விருத்த குமார பாலரான பட லத்திலுள்ள செய்தியைப் பெண்கள் நன்கறிந்து பாடி கும்மியடித்துக் கொண்டாடிக் களிப்புற்று பயன் பெறும்பொருட்டு இயற்றப்பட்டது. படி யாத பெண்களுக்கும் பொருள் எளிதில விளங் கும்படி இனிய செந்தமிழில் பாடப்பெற்றது.

ஆசிரியர் கைப்பட எழுதிய கையெழுத்துப்பிரதி யொன்று தவிர வேறு பிரதியே கிடையாது. ஆசிரியர் காலஞ்சென்றபின் அச்சிறு நூலின் அருமையறிந்த நண்பர் அதனைப் பாதுகாத்து வைத்திருந்து அச்சிட்டளித்த நன்றி மிகவும் பாராட்டத்தக்கதேயாம்.

அழகியசொக்கநாதரைச் "சிற்றின்பக் கவிராயர்" என்று சிலர் சொல்வதுண்டு. ஆனால் அவர் பேரின்பப் பாடல்களும் செய்துள்ளார். சிற்றின்பப் பாடல்களைப் பாமரர்களும் கேட்டவுடனே இரண்டொருமுறையில் கற்றுக்கொண்டு பாடிக்கொண்டு திரியும்படியான நாடோடி நடையில் நன்கமைந்திருப்பதாலும் இவை எல்லார் செவியிலும் விழுவதாலும் இவருக்கு அப்பெயர் கிடைத்ததுபோலும். இவரையும் இன்பகவி அண்ணமலை ரெட்டியாரையும் இத்துறையில் ஒருவாறு ஒப்பிடலாம். இது நிற்க, ஷை திருவிளையாடற்கும்மிக்கு முடிவுரையாக 10 கண்ணிகள் இயற்றி நமது நணபர் சேர்த்திருக்கின்றார். இம்முடிவுரைக் கும்மியில் அச்சரிதத்திலிருந்து நமது பெண்கள் தெரிந்துகொள்ளவேண்டிய நற்பயன்களை ஆராய்ந்தெடுத்து நன்கு விளக்கிக் காட்டியிருக்கிறார்.

(அனுபந்தத்தில் காண்க.)

## 9. நூலாராய்ச்சி.

இனி, தமிழ் இலக்கியங்களில் முக்கியமான சில பெருநூல்களில் நண்பருக்கு ஆராய்ச்சியுண்டென்பது, அவரோடு உரையாடுங்கால் அவர் எடுத்துக் கூறும் மேற்கோளால் இனிது விளங்கும். திருக்குறள், சீவகசிந்தாமணி, சிலப்பதிகாரம், நாலடியார், கம்பராமாயணம், வில்லி பாரதம் முதலிய நூல்களிலிருந்து பேசும் பொருளுக்குப் பொருத்தமான ஆதாரவுகள் எடுத்துக் காட்டுவார். மேலும் கம்பராமாயணக் கவி நயங்களில் மிகவும் ஈடுபட்டவர். இந்நூலை இவர் பலகாலும் பார்ப்பதுண்டு. கவிச்சக்கரவர்த்தியின் ஆற்றலைப்பற்றி அடிக்கடி பாராட்டிப் பேசுவார். சட்ட சம்பந்தமான ஏதேனும் ஒருவிஷயத்தைப் பற்றி ஆழ்ந்து யோசிக்கும்படி நேரிட்டால் இராமாயணத்தில் அதற்குரியபடலத்தைத் திருப்பிப் படிப்பார்; படித்துத்தெளிந்தபின் அவ்விஷயத்தைத் திரும்பவும் நன்காராய்ந்து முடிவுக்கு வருவார். மேலும் இவர் கம்பராமாயணத்தில் மிக முக்கியமான பாடல்களில் சுமார் 1000 செய்யுள்களைப் பொறுக்கி எடுப்பதில் முயற்சியுற்றிருந்தார். அப்பாடல்களைத்திரட்டி ஒரு தனிப் புத்தகமாக அச்சிட்டுத் தரவேண்டும் என்பது

அவர் நோக்கம். தமிழ் இலக்கியங்களில் இவர்க்குள்ள ஆர்வம் அளவிடற்கரிதாம்.

## 10. வைக்கீல் வேலை.

இப்பால், நண்பர் நியாயவாதியாயிருந்த நிலைமையில் இவர் தம்குணஞ் செயல்களைப்பற்றிச் சிறிது ஆராய்வாம். எந்த நாட்டிலும் குற்றஞ் செய்கிறவர்களும் சட்ட விரோதமாய் நடப்பவர்களும் உண்டு. ஆயினும் உலகத்திலுள்ள நாடுகளில் நல்வழியில்வந்த கல்வியறிவும் நாகரீகமும் முதிர்ந்திருக்கும் அளவிற்குத் தக்கபடி குற்றவாளிகளின் தொகை குறைந்திருப்பதும் இயல்பே

இப்படிக் குற்றவாளிகள் குறைந்துள்ள நாடுகளில் நீதி மன்றுகள் மிகச் சுருக்கமாகவேயிருக்கும். சிறந்த அரசாட்சியில் நியாய மன்றங்கள் நாளுக்கு நாள் குறைந்துகொண்டே வர வேண்டும். நமது திருநெல்வேலி ஜில்லாவில் 50 வருஷங்களுக்கு முன்னே நியாயஸ்தலங்கள் (கோர்ட்டுகள்) எத்தனையிருந்தன? இப்போது எத்தனை இருக்கின்றனவென்று கணக்கெடுத்துப் பார்த்தால் ஒன்று மூன்றாக மிகுதிப்பட்டிருப்பது தெரியவரும். நியாயவாதிகளின் தொகை அக்காலத்திற்கும் இக்காலத்திற்கும் 1—30 ஆக

இருக்கலாமென்பது குறைந்த அளவில் கூறுவதாகும். இனி கட்சிக்காரரின் பெருக்கம் ஒன்றுக்கு நூறுயிருக்கக் காணலாம். இப்பெருக்கம் பொதுசனத்தொகையின் வளர்ச்சிக்கு, சன சங்கைக் கணக்கின்படி பார்த்தால் பலமடங்கு மேற்பட்டிருப்பது தெரியவரும். ஒரு ஜில்லாவினது அரசாட்சியில் மற்றத் துறைகளில் இத்தனை இத்தனை உத்தியோகஸ்தர்கள் என்று ஒரு கணக்கு உண்டு; நியாயவாதியாய் வருபவர்களுக்கோ கணக்கில்லை. திருநெல்வேலிஜில்லாக்கோர்ட்டில் வக்கீலாயிருப்பதற்கு, (சுமார் 50 ஆண்டுகளுக்கு முன்னர்) ஒருவர் சன்னது வேண்டுமென்று கேட்டபோது ஷை கோர்ட்டு நியாயாதிபதி "முன்னமே இக்கோர்ட்டில் பன்னிரண்டு பேர்கள் இருப்பதால் இனிக் காலி வந்தால் சன்னது கொடுக்கப்படும்" என்று சொன்னதாகவும் கேள்விப்பட்டிருக்கிறோம். ஆனால், இக்காலத்தில் வரையறையின்றி விரும்பினவர்களெல்லாம் நியாயவாதியாய் வரலாம் என்று ஏற்பட்டிருப்பதாலும், ஓரிடத்திலேயே நிலையாக இருக்கக்கூடிய சுவாதீன உத்தியோகமாயிருப்பதாலும் படிப்பாளிகளில் பலரும் வைக்கில் உத்தியோகத்தையே நாடிக்கொள்ளுவாராயினர். ஆகவே கட்சிக்காரர்களும் நாளுக்கு நாள் தானப்பெருக்கத்தில் பல்கிவருகின்றார்கள்.

தாயாதிபாக விஷயமாய் ஒரு குடும்பத்தில் தர்க்கம் வந்து கீழ்க் கோர்ட்டிலிருந்து மேல் கோர்ட்டு வரை ஒழுங்காக வழக்கிட்டு வெற்றி பெற்ற சிலர், கோர்ட்டுச் செலவின் கடனுக்காக எவ்வகைச் சொத்துக்களையும் இழந்துவிட்டு தம் தம் அந்தியகாலத்தில் வீடுமில்லாமல் வாடகை வீட்டிலும் இரவல் குடியிருப்பிலும் பரிதாபத் துடன் மாணமடைந்ததைக் கண்கூடாகக் கண்டிருக்கிறோம். வெற்றிபெற்றவர் கதி இப் படியானல் தோற்றவர் கதியைப் பற்றிப் பேச வேண்டியதில்லையே. நியாயஸ்தலங்களும், நியாயவாதிகளும், தேசத்திலுள்ள குடிகளின் நன்மைக்காகவே ஏற்பட்டிருந்தாலும் பிள்ளை யார் பிடிக்கக் குரங்காய் முடிந்த கதை போல் கோர்ட்டில் வழக்கிடும் குடித்தனக்காரர்கள் பெரும்பாலும் கேடுறுவார்களென்பது திண்ணம். ஆகையால், தேசாபிமானத்தால் இவ் விஷயத் தைப்பற்றி இடைப் பிறவரலாகச் சிறிது பேச நேர்ந்ததேயன்றி யாரிடத்தேனும் வெறுப்புக் கொண்டு பேசியதன்று. இந்திய போலீஸ் உத் தியோகத்தைப் பற்றிப் பெரும்பாலும் குறை கூறுவது வழக்கமாயிருந்தாலும், அத்துறையி லும் உத்தமர்களிருப்பதுபோல இந் நாட்டில் நியாயவாதிகளிலும் பல உத்தமர்கள் உண்டென்ப

தில் ஐயமில்லை. இவ்வுத்தமர்களில் நம் அன்பரா கிய பிள்ளையவர்கள் ஒருவராவர்.

இனி, நியாயவாதியர் நிலைமையில் இவர் நடந்துகொண்ட முறைகள் பாராட்டற்குரியன வாம். ஆயினும், அத்துறையில் சிறிதும் அநு பவமில்லாத எம்போலியர், அவ்விஷயத்தைவிபர மாகவும், விளக்கமாகவும் எடுத்துறைக்க முடி யாது எனினும், அறிந்தவற்றில் குறிப்பாகச்சில கூறலாகும். அவர்களிடத்தில் கட்சிக்காரர்க ளில் வாதியேனும், பிரதிவாதியேனும் வந்தால் முதலாவது முறைப்படி அன்போடு ஏற்றுக் கொள்வதில் தடையிராது. வாக்குமூலங்களை ஒருவாறு கேட்டறிந்தபின்னர் அவரவர் வழக்கு களிலுள்ள குறை குற்றங்களை பக்குவமாய் எடுத் துக்காட்டி அவற்றைப்பற்றி ஆழ்ந்து சிந்திக்கும் படி செய்வர். இந்த நிலைமையில் வந்த கட்சிக் காரரில் சிலர் தம் எதிரியோடு சமாதானமாகப் போவதே தகுதி என்றுணர்ந்து, அவ்வாறு செய்யப்போவர். எதிரி எந்த வழிக்கும் இணங் காதவனாயின் அப்படிப்பட்ட வழக்குகளை மேல் நடத்த உடன்படுவர். அங்ஙனம் உடன்படினும் வழக்கை கோர்ட்டில் தாக்கல் செய்த பின்னரும் கட்சிக்காரருக்குப் பெரு நட்டம் நேரிடாதபடி

சமாதானமாதற்குரிய முறைகளையே அனுசரிப்பர். இதனால், இவரிடத்தில் வரும் வழக்காளரில் பெரும்பான்மையோர் சமாதானமாக இணங்கிப்போகும்படியாகவே முடியும். இவர் இவ்வாறு செய்து வந்தது வக்கீல்களின் வீரத் தன்மைக்கும், வெற்றிக்கும், குறைவுபோலத் தோன்றினும், உண்மையான தேசாபிமானிகள் கருத்தில் மிகவுயர்வாகவே காணப்படும் என்பதில் ஐயமில்லை; நிற்க.

இவர், இல்வாழ்க்கையில் திரும்பத் திரும்பத் தாரமிழத்தலும், மறுதாரமடைதலும் ஆகிய காரியங்களால் பலவாறு துன்பப்பட்டவரெனினும், இன்னொரு வகையில் சிறந்த பாக்கியவானாயிருந்தார். நண்பர் நியாயவாதியாயிருந்த நிலைமைக்கேற்ற உற்ற நற்றுணையாகவும், எழுத்தாளராகவும்(குமாஸ்தா) அமைந்துள்ள ஒருவரே தொடக்கத்திலிருந்து நண்பரின் வாழ்நாள் முடிவு வரை உதவியாக இருந்தார். இவர் யாரெனில், திருநெல்வேலி மா. திரவியம்பிள்ளை என்பவர். இவருக்கு இங்கு ஏற்பட்டிருந்த பதவி சாமான்யமாயிருந்தாலும், நுண்ணறிவிலும், குண சீலங்களிலும், சிறந்த பெருந்தகையாகையால் பிள்ளையவர்களுக்கு ஒரு மந்திரிபோலிருந்தார். பிள்ளை

யவர்கள் காலஞ்சென்ற பின்னரும், பழமையை மறவாமல் அந்தக் குடும்பத்துக்கு உதவியாக இருந்துவருகின்றார். இது நிற்க.

## 11. ஒழுக்க வழக்கம்.

இனி, இச்சரித்திரத் தலைவர், பொதுமக்களோடு ஊடாடிக்கலந்து உறவாடுமுறை வியக்கத்தக்கது.

"எவரெவர் எத்திறத்தர் அத்திறத்தராய் நின்று
அவரவர்க் காவன கூறி—எவரெவர்க்கும்
உப்பாலாய் நிற்பர்மற் றெம்முடையார் தம்மு
எப்பாலும் நிற்ப தென" [டையான்

என்று குமரகுருபர சுவாமிகள் திருவாய்மலர்ந்தருளியபடி, இவர் பிறருடன் பழகலும் உரையாடலும் மிகப்பொருத்தமாயிருக்கும். வயதிலும், அறிவிலும் மற்றக் காரியங்களிலும் எந்த நிலைமையிலுள்ளவர்கள் வந்தாலும், அந்தந்த நிலைமைக்கு ஏற்றவாறு தம் மனதை அமைத்துக் கொண்டுதான் பேசத்தொடங்குவார். ஆகையால் எந்த நிலைமையிலுள்ளவர்களும் இவரை உற்ற தோழரெனக் கருதுவார்கள். அங்ஙனம் வெளியிடுவதில் அவரவர்களின் குற்றங்களும்

குணங்களும் இப்பாகவே வெளிப்படும். குற்றத்திற்கும் குணத்திற்கும் நண்பர் ஒரே புன்சிரிப்புத்தான் காட்டுவார். ஆனால் அவர் அப்படிச் செய்யும் முறையில் குற்றத்தைக் கண்டித்தலும் குணங்கண்ட இடத்தில் ஆதரித்தலும் அவர்தம் முகக்குறியால் நன்குவிளங்கும். இனி, மனமகிழ்ச்சிக்குரியவை நேரிடும் போதெல்லாம அம்மகிழ்ச்சியைப் பெருஞ்சிரிப்பால் வெளியிடுவார். பெருஞ்சிரிப்பு உடம்புக்கு நல்லதென்று தெரிந்துகொண்டதுகாரணமாக, அவர் அப்படிச் சிரிக்கும் போதுண்டாகும் சத்தம் பக்கத்திலிருப்பவர்களுக்குச் செவிடுபடக்கேட்கும். இரவில் அடுத்த தெரு வரை கேட்கும். எவ்வளவு தூக்கத்தில் அழுந்தியிருப்பவர்களுக்கும் அப்பெருஞ்சிரிப்போசை அவ்வவர் மன வருத்தத்தைச் சிறிது மாற்றிவிடும். அத்தகைய பெருஞ்சிரிப்போசையை, கிராமபோனில் ஆங்கிலப்பாட்டுடன் கேட்டிருப்பதைத் தவிர வேறு யார்மாட்டும் யாம் இதுவரை கேட்டதில்லை. இது, தமக்கும் பிறர்க்கும் நலந்தரும் அவர் தம் செயற்கையாகிய வழக்கத்தில் ஒன்றாம்.

மேலும், இவர் யாரிடத்திலும் எச்சமயத்திலும் அமைதியுடன் சாந்தமாகவே உரையாடு

வது வழக்கம். கண்டித்துச் சொல்லவேண்டிய சமயத்திலும், விநயமாகவும், மனதில் அழுத்த மாய்ப் படும்படியாகவும் பேசுவதேயன்றி கடுஞ் சொல்லாற கண்டிப்பது பெரும்பாலும் இல்லை. இஃது நிறக.

யாரேனும், இவரிடம் ஏதேனும் உதவியை நாடி வந்தால் தம்மால் ஆகக்கூடியதைச செய்வ தாகச் சொல்லி, ஊக்கமுண்டாக்குவர். அவ் வூக்கத்தை முன்னிட்டே அன்னோரிற் சிலர் இவருதவியின்றியே தம் காரியங்களை முடித்துக் கொள்வார்கள். சிலர் இவருதவிகொண்டு காரிய சித்தி பெறுவர். சில சமயங்களில், சிலர் எடுத் துக்கொண்டு செய்யக்கருதிய காரியங்கள் முற் றுப் பெறுதென்று, இவருக்குத் தோன்றுவ துடன் தம்மால் யாதும் உதவி செய்யமுடியா தென்றிருந்தாலும் அங்ஙனம் தமக்குத் தோன் றியதை உள்ளபடி வெளியிடாமல், முயற்சித்துப் பார்க்கும்படியாகவும் தமது உதவி வேண்டிய இடத்தில் செய்யச் சித்தமா யிருப்பதாகவுஞ் சொல்லுவார். இந்த இடத்தில் இவர் கொள் கையானது பொருத்தமாகத் தோன்றுவிடினும், மேலும்,

"செயக்கடவ வல்லனவும் செய்துமன் என்பார் நயத்தகு நாகரிகம் என்னும்-செயிர்த்துரைப்பின்

நெஞ்சுநோமென்றுதலைதுமிப்பான் தன்னளி
எஞ்சா தெடுத்துரைக்கற் பாற்று". [போல்

என்ற நீதி வாக்கியத்தின்படி கண்டிக்கத் தக்கதுபோ லிருப்பினும், ஷை கொள்கையை ஒருவாறு ஆதரித்து சமாதானம் சொல்வதற்கும் இடமுண்டு. "உறுதிபயப்பகடைபோகாவேனும் இறுவரைகாறு முயல்ப-இறுமுயிர்க்கும், ஆயுள் மருந்தொழுக்கல் தீதன்றால், அல்லனபோல ஆவனவும் உண்டு சில". என்று ஷை நீதிநெறி விளக்கம் செய்த ஆசிரியரே கூறியுள்ளார். இதன் கருத்துரையாவது சிலநல்லகாரியங்கள் முற்றுப் பெறாவெனத்தோன்றினும் கடைசிவரை உழைத்துப்பார்க்க வேண்டும். மருத்துவர்களால் கைவிடப்பட்ட உயிர்களுக்கும் மருந்து கொடுப்பதுண்டு. அப்படிக் கொடுப்பதால் தப்பித்தவறிப் பிழைத்துக்கொண்ட உயிர்களும் உண்டு. இவ்வண்ணம் "ஆகாதனபோல் தோன்றி, கைகூடிய காரியங்களுமுண்டு" என்பதாம். இந்த நியாயம் பற்றி நமது நண்பர் கொள்கைக்கு சமாதானம் கூறலாம.

இவர் உரையாடலில் (சம்பாஷணை) ஆழ்ந்த கருத்துக்கள் அடங்கிக்கிடக்கும்; நன்பொருள் நயம்பட விளங்கும்: சொன்னயம் சிறந்து நலங்

கும். சமயத்துக்கேற்ற விநயமும், விகடமும் இயல்பாகவே வரும். புன்சிரிப்பிற் புலவராக வும் பெருஞ்சிரிப்பிற் பேராசிரியராகவும் இருந் தாலும், மிக விகடமாகப் பேசும்போதும், தான் முதலிற் சிரிப்பதில்லை. அப்பாற சிரிப்பதும் அடக்கமாகவேயிருக்கும். இது நிற்க

## 12. சிறப்புச் செயல்கள்.

இனி, நமது நண்பர் மிகவும் எச்சரிக்கை யுள்ளவர் என, சிறந்த அறிவாளிகளாலும் நனகு மதிக்கப்பட்டுள்ளார் என்பதற்கு உதாரணமாக இரண்டொரு செய்திகள் எடுத்துக் கூறலாம்: சுமார் 30 ஆண்டுகட்கு முன்னர் திருநெல்வேலி யில் உபநியாயாதிபதியாக (Sub-Judge)ச் சிறப் புற்றிருந்த கனம் **S.** கோபாலாச்சாரியார், (இவர் பின்னர், செஷன் சட்ஜாகவும் திருவனந்தபுரம் திவானகவும் இருந்தார்) நம் நண்பரிடத்தில் விசேஷ மதிப்பு வைத்திருந்தார். அவ்வாச்சாரி யார் பாளையங்கோட்டையில் தமது வீட்டில் பல விருந்தினர்களை உபசரிக்கவேண்டிய ஒரு விசே ஷத்தில் எல்லாக் காரியங்களையும் தனித்தனி பார்ப்பதற்குக் கூடியவரை தக்க ஆட்களை ஏற் படுத்தியிருந்தார். அப்படிச் செய்திருந்தும், மொத்தமாக மேற்பார்த்து சீர்ப்படுத்திச் சிறப்

பிக்கவேண்டிய பெரும்பொறுப்பை வகிக்குமாறு நம் நண்பரை வேண்டிக்கொண்டனர். 6மணிக்குக் காப்பிக்கு வேண்டிய பால் அந்த நேரத்தில் தவறாமல் வந்து சேரும்பொருட்டு இவர் செய்த ஏற்பாடுகளைப்பற்றி நேரில்சொல்லக்கேட்டிருக்கிறேன். பால்மாட்டுக் குடையவனிடத்தில் அச்சாரம் கொடுத்து நேரத்தைப்பற்றிக்கண்டிப்பாய்ச் சொல்லிவைத்தமட்டில் அமையாது, பால் கறப்பவனிடத்திலும், கறப்பவனை விடியற்காலத்தில் எழுப்பிவிட வேண்டியவனிடத்திலும் எச்சரிக்கையாக நடக்கும்படி திட்டம் செய்ததுமன்றி அன்னோரை எழுப்பிவிட வேண்டியவன் தூங்கிப்போகாதபடி, இவனை எழுப்பிவிட, விடியற்காலத்தில் 4—மணிக்கு எச்சரிக்கை மணி (அலாரம) அடிக்கும்படி சாவி திருப்பி வைத்துள்ள கடிகாரத்தின் பக்கத்தில் படுத்திருந்து தவறாது எழுந்துபோகக்கூடிய பொறுப்புள்ள மேலாளையும் (குமஸ்தாவையும்) இத்தனைபேரையும் முறையே சரிபார்க்க ஒரு முதியோரையும் ஏற்படுத்திவைத்திருந்தார். இனி பட்டணப்பிரவேசத்திற்கு வேணடிய பூமாலை, வாத்தியக்காரர், வாகனம் முதலானவையிலும், இப்படியே ஒவ்வொன்றிலும் மிக எச்சரிக்கையான ஏற்பாடுகள் செய்து வைத்திருந்தார். ஆகையால் எந்த

வகையிலேனும்சிறிதும் இடர்ப்பாடில்லாமல் எல்லாம் மிக வசதியாகவே நிறைவேறின. இப்படியின்றி சாதாரணமாய்ச் செய்கிற ஏற்பாடுகளில் எவ்வளவு பணம் செலவிட்டாலும், அந்தந்த நேரத்தில் நடக்கவேண்டிய காரியங்கள் ஒழுங்காய் நடை பெருமல் விசேஷ வீட்டாருக்கும் விருந்தாக வந்திருப்பவர்களுக்கும பலவித வசதிக்குறைகள் நேரிடுவதை அடிக்கடி பார்க்கிறோம். "காலை 7-மணிக்கு காப்பி சாபபிடுவதற்கு வேண்டிய ஏறபாடுகளைச் சரிபாய்ச் செய்திருக்கிறோம், எல்லாம் ஒழுங்காக நடந்து போகும்" என்று உறுதியாய் நம்பிக்கொண்டு இருப்பார்கள். ஆனல் நடப்பில், மணி எட்டோ ஒன்பதோ, பத்தோ! எந்நேரத்தில் காப்பி கைக்கெட்டும் (கிடைக்கும்) என்பதைப்பற்றி முற்பட யாரும் உறுதிசொல்ல முடியாது. பட்டணப்பிரவேசம் இன்னும் அதிக இடர்ப்பாடுடையதாம். (அவஸ்தைக் குட்பட்டும்) வாகனம், பூமாலை மேளம், தீவர்த்தி முதலானவற்றில் ஏதேனும் ஒன்று குறுக்கிட்டுக் காலதாமதத்திற்கு காரணமாக அகாலத்தில் பட்டணப்பிரவேசம் செய்ய நேரிடும். நமது பிள்ளையவர்கள் தங்கள் வீட்டில் நடத்திய விசேஷங்களில் அப்படிப்பட்ட இடையூறுகளின்றி எல்லாம் செவ்வனே நடை

பெறக் கண்டிருக்கிறோம். மேலும் அத்தகைய விசேஷங்களில், புதுமையாகவும், நயமாகவும், சுருக்கமான செலவிலும் ஏதேனும் ஒன்று ஆய்ந் தறிந்து செய்யும் திறமுடையார். வீதியில் ஊர் வலம் வரும்போது, கூடவரும் கனவான்கள் வெறுங்கையோடிராமல் வெற்றிலை பாக்கு வழங் குவதுண்டு. தற்கால நாகரீகத்தில் வெற்றிலை யைத் தொட்டதும் விட்டதுமாக முடிவதன்றி, வாயிற்போடுவதும் கையில் அங்கமாக வைத்துக் கொள்வதும் அரிதாகியது. இது கருதி நமது நண்பர், வீதியில் ஊர்வலம் வருங்கால் கனவான் களுக்கு தாம்பூலத்துடன் கைக்கணியாக எலு மிச்சம்பழமேனும் ரோஜாப்பூவேனும் ஆளுக்கு ஒவ்வொன்று கொடுப்பது பொருத்தமாயிருக் கும் என்றெண்ணி முதன் முதலாக அங்ஙனம் செய்வித்தவர் இவரே. இது நிற்க,

## 14. பொதுநலம்.

நமது நண்பர் "தாமாய்த் தலையெடுத்துத் தக்கோர் எனச் சிறந்து, சீமான் என்னும் பெய ரும் செல்வாக்கும் பெற்றுரேல்" — யார் யார்க்கு என்னென்னநன்மைகள் புரிந்தார்? என்னென்ன பொது நன்மைகள் செய்தார்? கல்விச்சாலை கட்டு

வித்தனரா? சத்திரம் சாவடி செய்வித்தனரா? மருத்துவ நிலையம் மாண்புறுத்தினரா? என்னும் வினாக்கள் பல எதிர்வராநிற்கும். யாம் இவற்றிற் குரிய விடைதருமுன்னர் 'பொது நலம்' என்பதைப்பற்றி எம்மறிவுக்கு எட்டியபடி சிறிது ஆராய்ந்து கொள்வது நன்றாம். முதலில் நாம் எடுத்துக்கொண்ட பொருளுக்கிணையான ஒரு மேலான பெருங்காரியத்தைப் பற்றிச் சிறிது கருதுவோமாக, "தன்னையறிந்தவன் தலைவனை அறிவான" என்பது சாதாரணமாய் வழங்கும் பழமொழியா யிருந்தாலும் மிக முக்கியமான கருத்தடங்கியது. "தன் காரியம் பாராதவன் சாமி காரியம் பார்ப்பானு" என்பதும் அதனை அடுத்து நிகழ்வதொன்றாம். இது சமயத்திற் கேறறபடி பல பொருள்களில் வழங்கப்பட்டுவருகிறது. 1. தன் காரியம் பார்த்த பின்புதான் பிறர் காரியம் கவனிக்கப்படும். 2. தன் காரியம் பாராமல் பிறர் காரியம் பார்ப்பவன் கூர்கெட்டவன். 3. தன் காரியம் பார்க்கத் தெரியாதவனல் பிறர் காரியம் பார்க்கமுடியாது. 4. எவனும் தன் காரியத்தைத்தான் மனங்கொண்டு பார்ப்பான், இங்கே கூறிய பொருள்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு வகையில் பொருத்தமாகத்தோன்றினும் சிறந்த பொருளல்ல. தன்

காரியத்தை உரிமையான வழியில் பார்ப்பவனே சாமிகாரியம் பார்ப்பவன்: சாமி காரியம் எது என்றுஆராய்ந்தறிந்து பார்ப்பவனே தன்காரியம் சரியாய்ப் பார்ப்பவனுவான். அதாவது தன் காரியமும் சாமிகாரியமும் ஒன்றேயாம் என்பதுவே அப்பழமொழிக்குத் தகுதியான பொருளாகும். இப்பொருளைத் தெளிவாய் விளக்குவதற்குரிய உதாரணங்கள் விரிவாய் வருமிடம் வேறுண்டு. ஆகையால் இங்கு விரியாமல், முற்கூறிய மேலான முதுமொழிப் பொருளைத் தொடர்வாம். "தன்னை யறிந்தவன் தலைவனை யறிவான்" இதனுல் தன்னையறிதலும் தலைவனை யறிதலும் ஒரே காரியமாக முடியும் என்பது தெளிவாகின்றது. ஆகவே "தலைவனை அறிந்தவனே தன்னையு மறிவான்" எனினும் பொருந்தும். ஆனல் இதை முன்னிட்டு "மேலான தலைவன் இல்லை என்றுதல், தானே தலைவன் என்றுதல் சொல்லவொண்ணுது: தானுமுண்டு தலைவனுமுண்டு. ஆயினும் தலைவனுந் தானும் இமைப்பொழுதேனும் வேருகப் பிரிந்திருக்க வொண்ணுது. அங்ஙனம் பிரிந்திருக்கவொண்ணுத இரு பொருள்களில் ஒன்றை உண்மையான நெறியில் ஆராய்ந்தறியப் புகுந்த இடத்தில் மற்றதையும் ஒருவாற்றேனும் அறியாதிருக்கமுடி-

யாது. சிறிதேனும் அறியும்படி இயல்பாகவே நேரிடும். சீவனும் சிவனும் பிரிந்திருப்பதில்லை என்பதற்கு மேற்கோள் (பிரமாணங்கள்)
"உலகமும் பல்லுயிரும் ஒன்றி நிறைந்தோங்கி, இலகும் சிவன் எம்மிறை".

"அண்டாண்டம் யாவும் நீ கொண்டு நின்ற கோலமே"

"எங்கணும் நீயென்றால் இருந்தபடி எய்தாமல் அங்கும் இங்கும் என்றலையலாமோ பராபரமே"

"எட்டுத்திசையும் ஒன்றாய் இன்பமாய் நின்ற உன்னை
விட்டுப்பிரிய இடம் வேறு பராபரமே".

இத்தகைய அருள்வாக்கியங்களால் தானும் தலைவனும் பூவும் மணமும்போல், பிரியவொண்ணாத தன்னிலையிலிருப்பது தெற்றென விளங்கும். முழுமுதற் கடவுளாகிய எல்லையில்லாப் பரம் பொருள் ஒன்றில் எல்லையுள்ள எல்லாப் பொருள்களும் இயல்பிலமைந்துள்ளன. அதாவது அளவிலாப் பொருள் ஒன்றில், அளவுடைப்பொருள் எண்ணிறந்த கோடிகளும் அடங்கிக் கிடக்கின்றன. இவ்வாறு கிடக்கும் இந்நிலைதான்—

உண்மைப்பொருள் ஒன்றென்பதற்கும், இரண்டென்பதற்கும், மூன்றென்பதற்கும், மேற்சொல்வதற்கும்—காரணமாயிருக்கின்றது. ஆகையால் "மனைமறிந்தவன் பூவறிவான் பூவறிந்தவன் மனைமறிவான்" என்னும் நியாயம்போல் தன்னியல்பின் உண்மையை அறியும்போதே தன்னுயிர்க்குயிரான தலைவனியல்பும் ஒருவாறு துலங்கும். இதனால் "தானும் தலைவனும் உள்பொருள் எனவும், தலைவனுந்தானும் வேறன்றெனவும்உணர்தலாகிய "இரண்டுறும்ஒன்று" என்னும்துவிதாத்துவித சமரச நன்னிலை சித்திக்கும். "சந்ததமும் எனது செயல் நினது செயல், யான் எனுந்தன்மை நினையன்றியில்லாத் தன்மையால் வேறலேன், வேதாந்த சித்தாந்த சமரச சுபாவமிதுவே" என்ற பெரியாரது கொள்கை ஈங்கு ஆழ்ந்து சிந்திக்கற்பாலது. இது நிற்க.

பொதுநல சம்பந்தமாக நமது நண்பரின் செய்கையும் கொள்கையும் எத்தன்மையது என்பதுபற்றிப் பேசவந்த இடத்தில், அறிதற்கரிய தத்துவ ஆராய்ச்சியில் தலையிடுவதற்குக்காரணம் யாதெனில், இவ்விரண்டும் ஒன்றிற்கொன்று இணையாகவும் தக்க உவமானமாகவும் காணப்படுவதுடன் நமது நண்பரது சைவசமயக்கொள்கை

இத்தகையதாகையால் என்க.

"பொதுநலம்" என்பதற்கு மறுதலைபோல் நிற்பது தந்நலமேயாம். ஆயினும் தந்நலமும் பொதுநலமும் உய்த்துணர வல்லார்க்கு ஒன்றே யாம். தந்நலம் தெரிந்தவன் பொதுநலம் பேணுவான். பொதுநலம் பேணுவோன் தந்நலந் தெரிவான். என்பது பெரியார் எல்லாம் ஒப்பமுடிந்த உண்மை.

"வாணிகம் செய்வார்க்கு வாணிகம்பேணிப்
பிறவும் தமபோற்செயல்" (குறள்)

என்றபடி தக்கவழியில் பொது நலம் நாடினுல் அது தந்நலமாகவே முடியும். இது நமக்குத் தெளிவாய் விளங்கும்படி திருவருளாற் சிலகாரியங்கள் இயற்கையிலேயே அமைக்கப் பட்டுள்ளன. உயிர்வாழ்க்கைக்கு இன்றியமையாதது ஆகாயம் தண்ணீர் முதலியன. அசுத்தப்படுவது காரணமாக ஒரு நகரத்தில் தொத்து வியாதிகள் நேரிடாதபடி காத்துக்கொள்ளவேண்டியதற்காக அந்நகரில் தண்ணீர் முதலியவற்றை அசுத்தமாகாதபடி பாதுகாப்பது அந்நகரத் தலைவரது பொதுநலக் கடமையாம். ஆயினும் அப் பொது நலத்தில் அந்நகரத் தலைவரது தந்நலமும் அவ்வளவில் அமைந்து கிடப்பது வெளிப்படை

யாக விளங்கும். பள்ளிக்கூடம் இல்லாத ஒரு சிற்றூரில் குடியிருக்கும் ஒரு கனவான் தன் பிள்ளையைப் படிப்பிக்க விரும்பி அவ்வூரில் ஒரு பள்ளிக்கூடம் ஏற்படுத்தினால் அச் செய்கையில் பொதுநலமும் தந்நலமும் பொருந்தியே நிற்கும். ஒரு தனவான், தன்னூரில் ஊருணிக்கரையில் ஒரு படித்துறை தன் சொந்தச்செலவில் கட்டினால் பொதுநலமும் தந்நலமும் இரண்டறக் கலக்கும். ஊருக்கு அருகில் இருக்கிற ஒரு குளமானது, தண்ணீர் நிறைந்து ததும்பிக்கொண்டிருக்கையில், சில நிமிஷத்தில் உடைப்பெடுத்து அவ்வூரை அடியோடு அழித்து விடக்கூடியதாயிருப்பதுகண்ட ஒருவர் உடனே சில கூலியாட்களைக் கூட்டிக்கொண்டுவந்து, தண்ணீர் ஊருக்குள் வராதபடி வேறுவழியாகப் போகும்படி கரையில் சிறிது வெட்டித் திருப்பி விடுவதாலாகிய செய்கையில் தந்நலமும் பிறர் நலமுங்கூடிய தாகிய பொதுநலம் சிறந்து விளங்குகின்றது இதற்குமேல் தேச நன்மைக்காக உழைப்பதிலும், குடும்ப நன்மைபைக்கருதி பாடுபடுவதிலும், இருவகை நலமும் சேர்ந்தே இருக்கும். ஆகையால் பொதுநலம் என்பது தனக்கும் பிறர்க்கும் பொதுவான நன்மையென்று கொள்ளத்தக்கதேயாம். இனி, ஒரு நாள் மாலை

6-மணிக்கு ஒரு பெருங் கழகக் கூட்டத்தில் அரும்பொருள் ஒன்றைப் பற்றி ஓர் விரிவுரை (பிரசங்கம்) செய்ய உடம்பட்ட ஒரு நாவலர் அன்று பகலில் தம்முடம்புக்குரிய வசதிகளைக் கவனியாது அசட்டை செய்திருந்த படியால் அவர் பேசத்தொடங்கி முகவுரை முடியுமுன் அவருக்குத் தொண்டைப்புகைச்சல் வந்து மேற் பேசவொட்டாமல் தடுத்துவிட்டது. அந் நாவலர் தந்நலம் பேணாத குற்றத்தால் பொதுநலக் கேடு ஏற்படலாயிற்று. ஆகையால் எல்லாரும் வருத்தத்தோடு அவரவர் வீட்டிற்குத் திரும்பும் படி நேரிட்டது. இங்கே தந்நலம் குறைந்ததால் பொதுநலம் சிதைந்தது.

ஒருவன் தனக்காக நல்வழியிற் செய்யும் எவ்வித நன்மையும் அவன் குடும்பத்திற்கு நன்மை பயப்பதாகும். பலகுடும்பங்கள் சேர்ந்து ஊராகவும், நகரமாகவும், நாடாகவும் அமைந்திருப்பதால், ஒருகுடும்பம் முன்னேற்றம் அடைவதனால், ஊரும், நகரமும், நாடும் முன்னேற்றமடைவதற்கு ஏதுவுண்டாகும். ஆகவே நல்வழியிற் செய்யும் தந்நலமும் பொது நலமாகுமென்றறிகின்றோம்.

## 14. ஒற்றுமையும் ஒத்துழைத்தலும்

மானிடவாழ்க்கை தனித்து நிகழும் தன்மையதன்று. பறவைகள், விலங்குகள் கூட இல்லாத ஒரு தீவில் ஒருவன் தனியேயிருக்கும்படி நேரிட்டால் அவன் நிலமை எப்படியிருக்கும். கூடிவாழுந் தன்மையாலன்றோ மக்கள் தம் வாழ்க்கை மற்றெல்லாவற்றிலும் சிறப்புடையதாகின்றது. ஆகையால் "தன்னலம்" என ஒன்று தனித்திருப்பதாக எண்ணி உழைப்பவன் ஒருபோதும் இன்பமுறான். பொதுநலமே தந்நலம் என்று கொள்பவன் எப்பொழுதும் இன்பம் அடைவான்.

ஒரு மூலபுருஷனில் தோன்றிய ஒருபெருங் குடும்பம், சமையல் சாப்பாடு முதலிய வசதிகளைக்கருதி சில கிளைகளாகப் பிரிந்திருப்பினும், வருமானத்தில்மட்டும் வேண்டிய அளவு பிரித்துக்கொண்டு, பொருள் வருவாய் முதலிய காரியங்களைப் பொதுவாக வைத்துக்கொண்டு, எல்லாரும் ஒத்துழைத்துச் சிறப்புடன் வாழ்வதையும் பார்த்து வருகின்றோம். சில குடும்பங்களில் பொருள் வருவாய்களையும் பிரித்துக்கொண்ட பின்னரும் அன்பிற்குறைவுறாமல் ஒற்றுமையாக

உழைத்து நயம்பட வாழ்கின்ற சிறப்பையும் பார்க்கின்றோம். இவ்வுலகமாகிய பெருங்குடும்பம் ஒரே மூல புருஷனிடத்திலிருந்து தோன்றிய பலகோடிகளில் ஒன்றும். இக் குடும்பம் பெருகிக்கிளைத்து பல நாடுகளாகவும் பல ஊர்களாகவும் பல வீடுகளாகவும் விரிந்து காணப்படுகின்றது. ஒவ்வொரு வீட்டுத் தலைவனும் தன் குடும்பத்துக்குச் செய்யவேண்டிய கடமையும், தன்னூருக்குச் செய்யவேண்டிய கடமையும், தந்நாட்டுக்குச்செய்யவேண்டிய கடமையும், உலகத்திற்குச் செய்யவேண்டிய கடமையும் முறைப்படி ஒழுங்காய் நடைபெற்று வந்தால் உலகமாகிய பெருங் குடும்பத்தில் துன்பம் குறையும்; இன்பம் பெருகும். இம்முறை யுணராது தப்பான வழியில் தந்நலம் விரும்புவோர் முதலில் போலி இன்பமும் பின்பு பெருந் துன்பமும் அடைவர். தந்நலமும் பிறர் நலமுங் கலந்துள்ளதாகிய பொதுநலம் பேணுவோர் பேரின்பம் பெறுவர். இத்தகையோரில் நமது நண்பருமொருவராவர்.

## 15. பணக்கூடம். (Bank)

இச்சரித்திரத் தலைவர் பொதுநலம் பேணி வந்த செய்தியைக் குறித்து முறையே பேசு

வோம்: சுமார் 25 ஆண்டுகளுக்கு முன் திரு நெல்வேலிச் சில்லாவில், துறைமுகப் பட்டணமாகிய தூத்துக்குடி ஒன்றைத் தவிர, வேறு எவ்விடத்திலேனும் பணக்கூட்டுத் தொழிற் சங்கம் என்பதே கிடையாது. காசுக்கடைக்காரரும், நாட்டுக்கோட்டைச் செட்டிமாரும், சில பெரும் பணக்காரர்களும் தனித் தனியே பணங்கொடுக்கல் வாங்கல் செய்வதுண்டு. ஆனல் பொது ஜனங்களுக்குப் போதுமான வசதிகள் ஏறபடாதிருந்தது. இதுவிஷயத்தில் சனங்களுக்குள்ள குறைகளை நீக்கும் பொருட்டும், பணமுடையார் பலரும் அப்பயனை நிரந்தரமா யடைய வேண்டியும், முதலில் இவர் செய்த அரும் பெரும் முயற்சிகள் மிகவும் பாராட்டத் தக்கன. உள்ளூரிலும் வெளியூரிலுமுள்ள பல தனவான்களிடத்திலும் தனித்தனியாகவும் கூட்டங்கூடியும் பேசி, திருநெல்வேலிக்கு பணக்கூடம் (பாங்க்) ஏற்படுத்தவேண்டிய அவசியத்தையும் அதனல் அடையக்கூடிய நற்பயன்களையும் ஒவ்வொருவரும், அறிந்துணரும்படி எடுத்துக் கூறிவந்தார். இக்காரியத்தில் தம்மோடொத்துழைக்கவல்லார் ஒருவரைத் துணையாகச் சேர்த்துக்கொண்டார். கல்வி அறிவு ஒழுக்கங்களிற் சிறந்தவரும், நல்லிளமைப் பருவத்தினரும், தக்க பணக்காரரு

மாகிய திருவாளர். தில்லைச்சபாபதியா பிள்ளை (குளத்தூர் ஜமீன்தார்) நமது நண்பருக்குத் தோழரா யமைந்தார். இன்னும் திருவாளர். P. K. ராமய்யர், திருவாளர். சடகோப பிள்ளை (வழக்கறிஞர்) முதலிய சில தக்கோர்களையும் சேர்த்துக்கொண்டு சிலகாலம் அருமுயற்சிகள் பலசெய்துவந்தார். அப்பால் ஷைதொழிலைக்குல வித்தையாகக் கைக்கொண்டுள்ள நாட்டுக்கோட் டைச்செட்டிமாரிலும் சிலரைத்தெரிந்தெடுத்துக் கொண்டார். மேல் நடக்கவேண்டிய காரியங்களை எல்லாம் பேசி முடிவு செய்து கொண்டபின்னர், பணக்கூடம் திறக்கவேண்டிய நாளைக் குறிப் பிடலாயிற்று.

சுமார் 30 ஆண்டுகட்கு முன் 'திருநெல் வேலி பாங்க், லிமிட்டெட், திருநெல்வேலி' என் னும் பெயரால், திருநெல்வேலி கஸ்பா மேல ரத வீதியில பணக்கூடம் ஒன்று திறந்துவைக் கப்பட்டது. இது சிலகாலம் செம்மையாய் நடை பெறலாயிற்று. ஆயினும்,

> "எனைவகையாற் றேறியக் கண்ணும்
> வினைவகையால் வேறுகும் மாந்தர் பலர்"

என்ற பொய்யாமொழியின்படி, அப்பணக்கூடத்

திற்குக் காரியதரிசிகள் இருவரில் ஒருவரான தில்லேச்சபாபதியா பிள்ளை அகால மரணமடைந்தார். மற்றவராகிய செட்டியார் பொதுநலத்தைத் துறந்து போலித் தன்னலங்கருதி சிலமாய வித்தைகள் செய்யத்தொடங்கினர். ஆகையால் அப் பணக்கூடத்தில் பல மாறுதல்களும் மனத்தாங்கல்களும் ஏற்பட்டன. இதன் விபரம் சொல்லப்புகின் மிகவிரியும் என்றஞ்சி ஒதுக்கி விடுகின்றோம். அப்பால் அப்பணக்கூடத்திற்கு நேரிட்ட இடையூறுகளையும், இடர்ப்பாடுகளையும் நீக்கிச் சீர்படுத்தவேண்டி நமது நண்பரும் அவர் தோழர்களும் பலவாறு முயன்றும் பயன்படவில்லை.

"தீயவரோடொன்றிய திறத்தகு நலத்தோர்
ஆபவரை அந்நிலை அறிந்தனர் துறந்தாங்
கேயவரு நுண்பொடி படிந்துடன் எழுந்தே
பாய்பரி பரந்து தரிநின்றன பரந்தே"?

**(கருத்துரை.)** குதிரைகள் புழுதியிற் புரண்டால் உடனே எழுந்து புழுதியை அவ்விடத்திலேயே உதறிவிட்டு வேறிடம் செல்வதுபோல, நல்லோர் தீயோரை நன்கறியாது சேர்ந்தால் உண்மை தெரிந்தவுடனே அவரைவிட்டுப்பிரிந்து

செல்வர் என்னும் கம்பர் கவிக் கருத்தின்படி, நமது நண்பரும் அவர் தோழர்களும் அப்பணக் கூடத்தைவிட்டு நீங்கிக்கொண்டார்கள். கூடிய சீக்கிரத்தில் வேறு பணக்கூடம் நாட்ட முயன்றார்கள். முந்திய அநுபவத்தில் போராடிப்புண் பட்டுத் தேர்ந்த வீரர்களாகையால், இனி எவ்வித இடையூறும் நேரிடாதபடி, திடமானநிலையில் செம்மையாய் நடை பெறத்தக்க பணக்கூடம் ஒன்றை நாட்டிப் பொதுநலம் நிறுத்தக் கருதிப் பலமுறை கூட்டங்கூடி தீர்க்காலோசனைபண்ணி தீரத்தெளிந்து முடிவு செய்துகொண்டார்கள்.

இந்த முடிவில் முக்கியமான குறிப்பு:— சில்லரைப் புள்ளிகளைச் சேர்ப்பதால் நேரிடும் இடர்ப்பாடுகளை நீக்கும்பொருட்டு முன் பங்கு ஒன்றுக்கு ரூ 100 ஆக இருந்ததை—பங்கு 1-க்கு ரூ 2500 ஆக்கியது. அப்படியே 1902ல் "தென்னிந்தியா பாங்க்" லிமிடெட் என்னும் பெயரால் திருநெல்வேலி மேலரதவீதியில் ஒரு பணக்கூடத்தை நாட்டிப் பொதுநலம் நிறுத்தினார்கள். அது வளர்ந்தோங்கி இன்று வரை செவ்வனே நடைபெற்றுவருகின்றது. இப் பொதுநலப்பணக்கூடம் என்றுஞ் சிறந்தோங்குவதாக!

நம் நண்பர் பெரிது முயன்று செய்த இப் பொதுநலம் ஊருக்கும் நாட்டுக்கும் நன்மை தருவதுமன்றி அவர் தங் குடும்பத்துக்கும் நன்மை பயப்பதாயிற்று. நாளடைவில் நமது நண்பர் இந்நகரத்துச் சிறந்த செல்வர்களில் ஒருவராயினார். அப்பால் தாம் சொந்தத்தில் பணக்கூடம் ஒன்று அமைத்து வைக்கும் தகுதியுடையராயினார். 1087-ம்ஞுல் தமக்கு உற்ற நண்பராகிய திருவாளர் P. M. கைலாசம் பிள்ளையவர்களைத் துணைக்கொண்டு "**K. S.** பாங்க்" என்னும் பெயரால் மட்டிடப்பெறுத (Unlimited) பணக்கூடம் ஒன்றை அமைத்துவைத்தனர். இதுவும் செம்மையாய் நடைபெறுகின்றது.

நண்பருக்கு வக்கீல் வேலையும் ஜமீன் சம்பந்தமான வேலையும் இளமைப் பருவத்திலே அமைந்திருந்தன. அவை காரணமாக, குமாஸ்தாக்கள் முதலிய வேலையாட்களும் போதுமானபடி இருந்தார்கள். அங்ஙனம் இருக்கையில், நண்பர் பொதுநல நோக்கம் இல்லாதவராயிருந்தால் பணங்கொடுக்கல் வாங்கல் செய்தலை, அவ்வளவு அதிகமான செலவுக்கு இடமில்லாமலே நயம்பட நடத்திக்கொள்ளக்கூடும். இவ்வளவு பகிரதப் பிரயத்தனங்கள் செய்து பொதுப்பணக்

கூடங்கள் ஏற்படுத்த முயன்றிருக்கவேண்டாம். அங்ஙன முயன்று முடித்ததனுல்,இவர் போலித் தந்நலத்தில் பற்றற்றவர் என்பதும், தந்நலமும் பிறர்நலமும் பொருந்திய பொதுநலத்தில் அழுத்தமான பற்றுடையவர் என்பதும் அறியக்கிடக்கின்றது. இது நிற்க.

## 16. பொதுநலங்களுக்கு உதவிசெய்தல்.

இன்னும், நண்பர் தலையிட்டுச்செய்தனவும் செய்வித்தனவும், துணைநின்றனவுமாகிய பொது நலங்களைப்பற்றிச் சிறிது வெளியிடுவோம்.

**பெண் கல்வி.** திருநெல்வேலி கஸ்பா தெப்பக்குளத்துக்கு மேலத் தெருவில், திருவாளர் வக்கீல் பி. எம். கைலாசம்பிள்ளை அவர்களால் நாட்டப் பெற்றிருக்கிற தாயம்மை அம்மாள் பெண் கல்விச்சாலைக்கு அது ஏற்படுமுன் இடம் அமைப்பதற்காக முதலாவது இவர் செய்தது இன்றியமையாப் பேருதவியாகும். அதற்குப் பெருமுயற்சி செய்யவேண்டியதிருந்தது. அது விஷயத்தில் நண்பர் சிறிதும் சலியாது முயன்று ஷை கல்விச்சாலையை நாட்டியவராகிய திருவாளர் பி.எம். கைலாசம்பிள்ளையவர்களுக்கு வேண்

டும் உதவி புரிந்தார். மேலும் ஷை கல்விச்சாலை யின் வளர்ச்சியை மிகவிருப்பத்தோடு கவனித்து வந்தார். ஆண்டு நிறைவுவிழாக்களில் அக்கல்விச் சாலைமாணுக்கர்செய்துவரும் சம்பாஷணைக்குரிய விஷயங்களுக்கு வேண்டும் உதவிகளை இயன்ற வரை செய்து வந்தார். இவருடைய பெண் குழந்தைகளில் மூவர் ஷை கல்விச்சாலையிலேயே உயர்ந்தவகுப்புவரை படித்து முக்கியமான பரிசு களும் பெற்றிருக்கிறுர்கள். ஆகையால் அவர் உதவிசெய்த இப் பொதுநலத்தில் தன்னலமும், நேர் நேராகவே கைகூடியதாயிற்று.

உழவு தொழில் "உழுதுண்டு வாழ்வதற் கொப்பில்லை" நண்பர் திருநெல்வேலியில் விப சாயச் சங்கம் ஒன்றேற்படுத்தி தலைமை வகித்து வந்தார். பௌர்ணமியிலும், அமாவாசையிலும், விபசாயச் சங்கம் கூடி நடைபெற்று வந்தது. சங்கம் கூடவேண்டிய முறைநாள் பெண்டுகள் மூலமாக எளிதில் ஞாபகத்திற்கு வரும் பொ ருட்டு இவ்விரண்டு விரத தினங்களும் தெரிந்து எடுக்கப்பெற்றன. நிலமுடையதக்கோர் பலர் இச் சங்கத்தில்சேர்ந்துழைத்து மிகுந்தபயன் அடைந் தார்கள். அச்சங்கத்தின் ஒரு ஆண்டு நிறைவு விழாவுக்கு விபசாயத்துறைச் சர்க்கார்த் தலைவர்

(Director) வந்து தலைமை வகித்து சிறப்பித்தார். நண்பர் உழு தொழிலின் முக்கியமான பாகத்தைக் குறித்து ஓர் விரிவுரை (பிரசங்கம்) செய்தார். இவ்விரிவுரையை நாமும் நேரிற் கேட்டுளோம். இது நிற்க.

**வேளாளர் கல்வி.** வேளாளர் கல்வி அபிவிருத்திசங்கத்தில் நம் நண்பர்செய்தஉதவியைப் பற்றிப் பேசத் தொடங்குங்கால்—சாதி வேற்றுமை குறிக்கிற சங்கங்கள் ஏற்படுவதால், நமது நாட்டுக்கு நன்மையுண்டாகுமா? அத்தன்மையான ஒரு சங்கத்தை ஆதரிப்போர் செய்கையைப் பாராட்டிப் புகழ்தல்தகுமா? என்று இயல்பாய் எழும் வினாக்களுக்கு விடை யிருத்தல் நமது கடமையாதலால் அதுபற்றிச்சிறிது முயல்வோம்.

**சாதி வரலாறு.** சாதி, பால், திணை, என்பவை சற்றேறத் தாழ ஒரு பொருள் குறிக்கும் சொற்கள். சாதிப் பிரிவுகள் பிறப்பியற்கையாலும், இடத்தாலும், நிறத்தாலும், நிலத்தாலும், தொழிலாலும், சமயக் கொள்கையாலும், குணத்தாலும் ஏற்படுவனவாம். ஆண், பெண் பிறப்பால் ஏற்பட்டவை; ஆங்கிலர், சீனர், ஆரியர்,

திராவிடர் இடத்தால் ஏற்பட்டவை: வெள்ளைக்காரர், கருப்பு மனிதர் நிறத்தால் ஏற்பட்டவை. மருதநில மக்கள், குறிஞ்சிநில மக்கள், முல்லை நில மக்கள் நிலத்தால் ஏற்பட்டன. தட்டார், ஓதுவார், வண்ணார், நாவிதர்—தொழிலால் ஏற்பட்டவை. இந்துக்கள், கிறிஸ்தவர், மகம்மதியர்—மதக் கொள்கையால் ஏற்பட்டவை: நல்லோர், நடுவோர், தீயோர் உத்தமர், மத்திமர், அதமர் குணத்தால் ஏற்பட்டவை. மேற் கூறியவற்றில் பிறப்பாலும், தொழிலாலும் குணத்தாலும் ஏற்படும் சாதிப் பிரிவுகள் எல்லாத் தேசத்திற்கும் பொதுவாயுள்ளன. மற்ற வகையான சாதிகள் இல்லாத நாடுகளும் உண்டு.

**நால்வகைச் சாதி.** இனி–இந்தியாவில், குடியேற்றத்திற்காகவும், கொள்ளை யடிப்பதற்காகவும், வாணிகம் செய்வதற்காகவும், அரசாட்சி செய்வதற்காகவும், புறநாட்டார் பலர் ஒவ்வோர் காலங்களில் இந்நாட்டுள் புகுவாராயினர். ஆகையினாலே, சட்ட மாறுதல்களும் காலந்தோறும் செய்யவேண்டியதாயிற்று. ஆரியர் குடியேறி நிலைத்தபின் **மநுதர்ம சாஸ்திரம்** என்னும் சட்டம் ஏற்படுத்துங்கால் தொழிற்பற்றியுள்ள சாதிகளை எல்லாந் தொகுத்து பிராமணர், க்ஷத்திரி

யர், வைசியர், சூத்திரர் என நான்கு பிரிவுக்குள் அடக்கியபடி, வசதியான நிலைமையில் வைத்துக் கொண்டு சட்டங்கள் விதிக்கப்பட்டன. பிராமணர்=குருமார், க்ஷத்திரியர்=அரசர், வைசியர்=வியாபாரிகள், சூத்திரர்=பணி செய்வோர் (=அடிமைகள்).

**தென்னாட்டில் சாதி 2** இங்ஙனம் சாதி நான்கெனும் கொள்கையுடைய ஆரியரும், தென்னாடாகிய தமிழ் நாட்டின்கண் "சாதி யிரண்டொழிய வேறில்லை" என்று சாதிப்பாராயினர். அவை யாவன:— பிராமணரும் சூத்திரருந்தான். பண்டைக்காலத்தில் தமிழ் நாட்டில் தொழிலை முன்னிட்டுக் குறிக்கப்பட்ட பதினெண்சாதிமட்டுமே இருந்தபடியால் அவர்கள் யாவரும் ஓரினத்தராய் கீழ்மேல் என்ற வேற்றுமையின்றிக் கலந்து கொள்பவராயிருந்தார்கள். உடன் உண்ணுதலும் திருமணக்கலப்பும் தடையின்றி நிகழ்ந்து வந்தன.

**வேளாளர் நிலைமை—** அப்பால் வந்த புறநாட்டார், பண்டை நாட்டாரிற் பிரிந்துறைபவராயும் மறைந்துண்பவராயும் இருந்தபடியால் நாளடைவில் திராவிடருள்ளும் பிரிவும் மறைவும் ஏற்பட

லாயின. இனி இடையில் வந்தவர்கள் ஒற்றுமை நலம் இன்றிப் புதிய இடத்தில் ஒருவாரேனும் வசதியாய்க் குடித்தனம் பண்ணமுடியாதாகை யால் அவர்களுக்குள் ஒற்றுமையானது இன்றி யமையா வழக்கத்தில் இயற்கைக் குணமாய் அமைந்துவிட்டது. மற்றைத் தமிழ் நாட்டுச் சில்லரைத் தொழிலாளர்களாகிய பற்பல கூட்டத் தாருக்கும் ஒற்றுமைநலம் இன்றியமையாச் சிறப்புடையதாகையால் அவர்கள் நிலைமைக்கும் குறை நேரிடவில்லை. ஆனல் ஒப்பில்லாத உழு துண்ணும் வாழ்வுடைய வேளாண் மக்களாகிய பெருங்கூட்டத்தார்கள் தங்கள் பதவி உயர்ந் தென்று கருதும்படி இருந்தபடியால், தங்களுக் குள் ஒருவர் உதவியை ஒருவர் விரும்பாமலும், மதியாமலும் வாழ்வாராயினர். இதனல் இவர் களுக்குள் ஒற்றுமை என்பது நாளுக்கு நாள் குன்றுதலடைந்தது. இவர்கள் நிலைமை இரங் கத் தொடங்கிற்று. கல்வியுங்குறைவுறலாயிற்று. இந்த நிலைமையைக் கண்டுணர்ந்து வருந்திய வேளாண் மக்களுட் சில மூதறிவாளர்கள் இக் குறையைப் பரிகரிக்க எண்ணி, பெரிது முயன்று "வேளாளர் கல்வி அபிவிருத்தி சங்கம்" என ஒன்று எற்படுத்தி உழைக்கத் துணிந்தார்கள். இங்ஙனம் துணிந்து முயன்ற மேற்கூறிய மூதறி

ஞரில் நமது நண்பரும் ஒருவராவர்.

**"வேளாளர் கல்வி அபிவிருத்தி சங்கம்".—** ஆகையால் இவரது பெருந்தகைமையும் பொது நல விருப்பமும் கண்டறிந்த ஷ்டி வேளாளர் கல்வி அபிவிருத்தி சங்கத்தினர் பலரும், நண்பரைத் தலைமை வகிக்கும்படி வேண்டிக்கொண்டனர். சாதிவேற்றுமையால் நேரிடும் கொடுமைகள் அறவே ஒழியவேண்டுமென்றும், உலக முழுவதுமே ஒரே குடும்பமாக வாழ்தல்வேண்டுமென்றும் கருதிக்கொண்டிருக்கிற நமது நண்பர் தற்கால நிலைமையை நோக்கி, வேளாளர்களுக்குள்ளும் ஒற்றுமை ஏற்பட்டு இவர்களும் முன்னுக்கு வந்தால்தான் நம் நாட்டில எல்லாரும் ஏகமாய் ஒற்றுமைப்பட்டு ஏக குடும்பமாய் வாழ்வதற்குத் தோதாயிருக்கும் என்று தெரிந்து சங்கத்தினர்களின் வேண்டுகோளுக்கு இணங்குவாராயினர். ஒப்புக்கொண்டபடி சங்கத்தின் தலைவராயிருந்து சில ஆண்டுகளாய் தம் வாழ்நாள் முடிவுவரை தக்க உதவிபுரிந்துவந்தார். "ஊரார் பிள்ளையை ஊட்டி வளர்த்தால் தன் பிள்ளை தானே வளரும்" என்ற பழமொழிப்படி வேளாண்மக்கள் கல்விவிருத்திக்காக உழைத்துவந்த நம் நண்பர் காலஞ்சென்ற பின்னர், அவர் தம்

இளைய புத்திரர்களாகிய சிறுவர்கள் தக்க இடத்தில் அதாவது நமது நண்பரின் தம்பியாகிய T. S. விசுவநாதபிள்ளை B. A. வசத்தில் நல்ல வளர்ப்பும் கல்வியும் பெற்று வருகிறார்கள். இதில் பொது நலம் புரிதலால் தவறாதடையும் மெய்ப்பயன் காண்க.

## 17. அறச்சாலை.

வழிப்போக்கர்களின் வசதிக்காக ஏற்படுகிற சத்திரங்கள் முதலியவை எவ்வாறிருக்க வேண்டும் என்பதைப்பற்றி நாங்கள் உரையாடுகையில் நண்பர் தம் கருத்தை ஒரு சமயத்தில் வெளியிட்டுள்ளார். சத்திரங்கள் இடைநடுவழிகளில் மிக்க காற்று வசதியான இடங்களில் அமைந்திருக்கவேண்டும். கிணறுகளும் தண்ணீர் இறைத்துக்கொள்வதற்குரிய கருவிகளும் போதுமானபடி இருக்கவேண்டும். அதற்குமேல் கூடுமானால், மிக ஏழைகளாகிய வழிப்போக்கர்களுக்கு சாதி வேற்றுமையின்றிக் கஞ்சி வார்ப்பதற்குரிய ஏற்பாடுகளும் அமைத்துவைக்கலாம். இவ்வாறன்றி, சாதி வேற்றுமை குறித்து, நாள் ஒன்றுக்கு இத்தனைபேருக்கு சாப்பாடு உண்டு என்று ஏற்பட்டிருப்பது நன்றன்று. மேலும்,

அதனால் ஒருவாறு நன்மைக்கு இடையூறு நேரு வதுமுண்டு. வேறு வேலையின்றி, சத்திரங்கள் தோறும் சுற்றிக்கொண்டு திரிவதையே "புண் ணிய தலயாத்திரை" என்று நடந்து 8-மணிக் குச் செல்பவர்களுக்குத்தான் சத்திரங்களில் பெரும்பாலும் சீட்டும், சாப்பாடும் ஒழுங்காய்க் கிடைக்கக்கூடுமேயன்றி, நெடுந்தூரமான வழி யைப் பன்னிரண்டு மணிவரை வெயிலில் நடந்து பசிக் களைப்புற்றுவருகிற பிரயாணிகளுக்கு ஆகா ரம் கிடைப்பதரிது. ஆகையால் ஊரையொட்டி யிராத சத்திரங்களில் பிரயாணிகளுக்கு வேண் டிய பண்டங்களும், பலகாரமும், சாப்பாடும் விலைக்குக் கிடைக்கும்படி செய்விப்பது முக்கிய மான காரியம். இதற்குச் சாதகமாக, சத்திரத் திலேயே ஒரு பகுதியிற் கடையும், குடித்தன மும் வைத்துக் கொண்டிருக்கக்கூடிய ஒரு ஆளுக்கு உதவியாக சத்திரத்தின் வரும்படியிலி ருந்துசிறிது உபகாரச் சம்பளம் கொடுத்து வருவது மிகவும் பயன்படுவதாகும் என்றார்.

நண்பர் தமது கொள்கையைத் தழுவியே சிவலப்பேரிப் பக்கத்தில் ஒரு சத்திரத்தில் தண் ணீர் வசதிக்கு வேண்டுங்காரியங்களும் ஏழை களுக்குக் கம்பம்புற்கஞ்சி வார்ப்பதற்குரிய காரி

யங்களும் ஏற்படுத்தி அவர் காலத்தில் நடத்தி வந்தார். நண்பரது தரும சிந்தனையின் போக்கு இன்னும் எவ்வாறிருந்தது என்பதைக் குறிப்பா யுணர்த்துமாறு அவர் மற்றொரு சமயத்தில் சொன்ன ஒரு செய்தியை இங்கு கூறுவது பொருத்தமாயிருக்கும்.

ஒரு தேசத்தில் ஒரு சீமான் தன் சொத்தில் ஒரு பாதியை ஒரு தருமத்திற்காக எழுதி வைத்தார். அதாவது அத்தேசத்தில் கடன் கொடுத்தவர்களைச் சிறிதும் வஞ்சியாது, தம்மா லியன்ற வரை கடன்களைச் செலுத்திய பின் 100ரூபாய்க்குட்பட்ட பாக்கிக்காக சீவில் சிறையி லிருக்கும்படி நேரிட்டிருப்பவர்களை விடுதலை செய்யும் பொருட்டு ஷை சொத்தின் வருமானத் திலிருந்து ஷை டிக்கிரி கடன்பாக்கிகளை தீர்த்து நிவிர்த்தி செய்வதேயாம். இது செய்தி எந்தத் தேசத்தில் நிகழ்ந்ததென உடனே வினவித் தெரிந்துகொள்ளவில்லை. நண்பர் தேசத்தின் பெயர்குறியாததால், இக்கருத்து ஒருகால் அவ ருள்ளத்தில் உதித்ததாயிருக்கலாம் என்று அநு மானித்தலும் கூடும்.

## 18. பிள்ளை வளர்த்தல்.

நண்பர் தம் இரண்டாவது மனைவியின்

மூதற்பிள்ளையாகிய முத்துவீரப்பனை மிகப் பரி வோடு வளர்த்து வருகையில், தந்தை மகற் காற் றும் நன்றியை நன்குணர்ந்து அதற்குரிய முக்கி யமான குறிப்புகளை கருதுவாராயினர்.

"உள்ளதை யொன்று மொழியாமற் சொல்லும்
ஊருடன் கூடிவாழும் நெறியும்—
தெள்ளமுதாய்க் கொள்ளும் வண்ணம் உன் மக்களைத்
தேற்றிவைப்பாய் தமிழ் நாட்டுப் பெண்ணே"

"சுற்றியிருக்கும் பொருளின் குணங்களைச்
சுட்டி உசாவி யறிதல் நன்றே;
பற்றியறிந்திட பாலர்கள் கேட்பதை
பாங்குடன் சொல்வது பண்பாமே."

என்றப்படி, உண்மையுரைத்தலும், மெய்யன்பும், உள்ளத்திற் பதியும்படி செய்வதே முதற்படி யாம் என்பதுணர்ந்து அதற்கேற்ற பழக்கங்களை ஊட்டிவந்தார். பிள்ளைகள் முதலிற்காணும் எப் பொருளையும் பற்றி ஏதேனும் அறிய விரும்பு வது இயற்கையாதலால் அவர்கள் மனதில் இயல் பாய் எழும் வினக்களுக்கு நண்பர் பொறுமை யுடன் ஏற்றவாறு விடை கொடுப்பார். அவர் விடைதரும் முறையானது சிறுவர் மேலு மே லும் கேட்பதற்கு இடமும் ஊக்கமும் உண்டாக் கும். சிலசமயங்களில் அருமையான காரியங்

களைப்பற்றிப் பிள்ளைகள் கேட்கும் வினுக்களுக்குச் சரியான விடை சொல்லமுடியாமற் போவதுமுண்டு. உதாரணமாக, ஓரிடத்தில் தந்தைக்கும் மகனுக்கும் நேர்ந்த ஓர் உரையாடலை இங்கு எடுத்துரைப்போம். மாரிகாலத்திலொரு நாள் வண்ணாத்திப்பூச்சி யொன்று வீட்டுக்குள் வந்து பறந்து திரிகையில், சிறுவன் அதைப் பிடிக்கப் போனான்.

தந்தை:— நீ அதைப் பிடியாதே.

மகன்:— ஏன்? பிடித்தாலென்ன?

த:— உன் கையில் அகப்பட்டால் அது உயிரோடு திரும்பாது. உடனே சாகும்.

ம:— செத்தால் என்ன?

த:— வீணாக ஓர் உயிரைக்கொல்வது பாவம். நம்மால் அப்படி ஓர் உயிரை உண்டாக்க முடியுமா?

ம:— அதை உண்டாக்கினது யார்?

த:— கடவுள்.

ம:— நம்மை உண்டாக்கினது யார்?

த:— கடவுள் தான்.

ம:— கடவுளை உண்டாக்கினது யார்?

த:— அவரை ஒருவரும் உண்டாக்க வில்லை.

ம:— பின்னை அவர் எப்படி வந்தார்?

த:— அவர் தானாகவே எப்பொழுதும் இருக்கிறார்.

ம:— அவர் தன்னைப்போல் இன்னொரு கடவுளை உண்டாக்குவாரா?

த:— அது அவரால் முடியாது?

ம:— என் முடியாது? பின்னை யாரால முடியும்?

த:— (சினந்துகொண்டு) ஒருவராலும் முடியாது. வாயை மூடிக்கொண்டு சும்மா இரு.

என்றவுடனே பையன் அஞ்சி அடங்கிவிட்டான். இப்படிப்பட்ட பேச்சு நேரிடும்போது என்ன வந்தாலும் நமது நண்பர், சினந்துகொள்ளாமலும் வாயை மூடு என்று சொல்லாமலும் பொறுமையுடன்— "அதைப்பற்றி இன்னும் யோசிக்கவேண்டும்" என்று அன்பாய்ச் சொல்லி அமர்த்திக்கொண்டு, இப்பொழுது அப்பூச்சி சுவ

ரின்மேல் ஒட்டிக் கொண்டிருக்கிறதைப் பார். அதின் சிறகு எவ்வளவு மெல்லியதாயிருக்கிற தென்றும், சிறகில் எத்தனை அழகான நிறங்கள் அமைந்திருக்கிறதென்றும், சற்று தூர நின்று உற்றுப்பார்" என்று வேறு வழியில் பையன் மனதைத் திருப்பிவிடுவார். சினந்து சொல்லி, பிள்ளைகளின் உள்ளக் கிளர்ச்சியையும், உசாவி யறியும் இயற்கையையும் கெடுத்துவிடக் கூடா தென்பது நமது நண்பரது கொள்கை.

## 19 பொதுநல சங்கங்களில் ஒத்துழைத்தல்.

இனி நமது நண்பரின் பொதுநல விருப்பும் உழைப்புங் கண்டறிந்த பல பொதுநலச் சங்கங் களில் இவர் உதவியை நனி விரும்பிக்கொண் டார்கள். திருநெல்வேலி நகரப் பாதுகாப்புச் சங்க (முன்சிப்பாலிட்டி) த்தில் நெடுங்காலம் அங்கத்தினர் (கவுன்சிலர்) ஆக இருந்து ஊரார் உவக்குமாறு உழைத்து வந்தார். சிவ கமிட்டி என்னும் திருக்கோவில் அறநிலையப் பாதுகாப் புச் சங்கத்திலும், நெடுங்காலம் அங்கத்தினராக இருந்து உதவி புரிந்தார். மேற்படி சங்கத்தில் கட்சிப் பிரிவுகள் பெரும்பாலும் இருந்து வரும் எந்த சமயத்திலும் இன்ன பகுதியைச் சேர்ந்த

வரென்று சொல்லமுடியாது. நடுநிலையில் நின்று கொண்டு தம் மனச்சான்றிற்குத் தகுதியாகத் தோன்றுகிற வழியில் காரியங்களைக் கொண்டு முடிப்பதையே முறையாகக் கருதி வந்தார். ஒருகால் தம் கருத்துக்கு மாறாகக் காரியங்கள் முடிவுபெறினும் அதற்காக வறிதே வருந்துவ தில்லை. அதற்காக எவரிடத்தேனும் வெறுப்புக் கொள்வதுமில்லை. ஆகையால் இவ்வறச்செயல் களில் இவர் காலத்தில் சிறந்த சீர்திருத்தங்கள் ஏற்படாவிடினும், பொதுவாக நடு நிலையில்நின்ற மையால் நல்லபேர் எடுத்துக்கொண்டார்.

## சுதேச நீராவிக் கப்பற் கழகம்.

தூத்துக்குடியில் சுதேசிக் கப்பற் கழகம் ஏற்பட்டிருந்த காலத்தில் நமது நண்பர் அதைத் தொடங்கினோர்க்கு வேண்டும் உதவிகளை நெல் லையிலிருந்து புரிந்து வந்தபடியாலும், பொது வாக உலக நடையில் சிறந்த அநுபவமுடைய வராயிருந்தபடியாலும், மேற்படி காரியங்களை நிகழ்த்தும் தலைமையோர் (டைரக்டர்) களில் இவரும் ஒருவராய்த் தேர்ந்தெடுக்கப் பட்டிருந் தார். நம் நாட்டுப் பொது நன்மக்களின் ஊக்க மும், கைப்பொருளாகிய முதலும், போதுமான படியுண்டாயிருந்தும் அக்கப்பல் ஆம்பிபோல்

விரைந்து தோன்றி நிலைபெறு தொழிந்தது. காரணம்—இக்காலத்து நம்மவர்களுக்கு, இக் கப்பற்றொழில் முன் அனுபவம் சிறிதுமில்லாத புதுத்தொழிலென்பதொன்று. அரசாட்சியாரின், ஆதரிப்பேனும், அநுதாபமேனும், அணுவளவு மின்மையொன்று. (2) இந்தியாவில் முன்னரே இத்தொழிலைக்கைக்கொண்டுபேருதியமடைந்து கொண்டிருக்கிற புற நாட்டவரின வல்லாண்மை யொன்று. (3) ஆக இம்மூன்றில் ஒவ்வொன் றுமே தனித்தனி இடையூருய் நின்று காரியக் கேட்டை விளைவிக்கக் கூடியதெனில், மூன்றும் ஒருங்கேகூடிய விடத்தில் சுதேசிக்கப்பற்கம்பே னியின் கதி பயனற்றதாய்முடிந்தது வியப்பன்று. வினை வலியும், தன் வலியும், மாற்ருன் வலியும், துணைவலியும், தூக்கிச் செய்யாத பெருங்குறை யால் நேர்ந்த பயன் இதுவாமென்க.

## மகாநாடும், கைத்தொழிற் பொருட்காட்சியும்.

சுமார் 18வருக்கு முன்பாளையங்கோட்டை நூற்ருண்டு மண்டபத்தில் (சென்றிநெறி ஹா லில்) மாகாண மகாநாடு கூடியது. அதில் கைத் தொழிற்பொருட்காட்சியும் நடைபெற்றது. திருநெல்வேலி சில்லா, சிக்கனத்திற்குப் பேர்ப்

போன தாகையால், பொருட்காட்சி முதலிய காரியங்களுக்குரிய முன் முயற்சியில், நமது நண்பரைப் பொருளாளர் (Treasurer) ஆக நிய மித்துக்கொண்டால் குறித்த காரியங்கள் எவ் வழியினும் இடர்ப்பாடின்றி இனிது முடியும் என்று சிலர் தூண்டினார்கள். அப்படியே அப் பொறுப்பை வகிக்கும்படி மற்றவர்களும் வேண் டிக்கொண்டார்கள். வேண்டுகோட் கிணங்கி அவ்வேலையை ஏற்றுக்கொண்டார். எதிர்பார்த்த படியே எல்லாம் சிறப்பாய் நிறைவேறின. ஷை மகா நாட்டுத் தலைவர் முடிவுரைகூறி வந்தனம் அளிக்கையில், பணத்தைப்பற்றி தொடக்கத்தில் தோன்றிய கவலையையும் அக்கவலை எளிதில் நீங்குமாறு செய்த நண்பரின் நிர்வாகத் திற மையையும் எடுத்துப் பாராட்டிப் பேசிமுடித் தார். இவர்செய்த இவ்வகையான உதவிகள் இன்னும் பலவுள. விரிப்பிற் பெருகும் என்று அஞ்சி விடுத்தாம்.

## 20. சில சிறு செய்திகள்.

வியப்புறச் செயல்:— இராமநாதபுரம் மகா ராஜா பாஸ்கர சேதுபதியவர்கள் செய்த ஓர் தல யாத்திரையில், குற்றாலம், பாவநாசம் முதலான இடங்களுக்குச்சென்று வருகையில் ஒரு நாள்

சிங்கம்பட்டிக்கு விஜயமானார்கள். தலயாத்திரையில் சேதுபதியவர்கள் உபசாரங்களையும் வேறு வசதிகளையும் விரும்பவில்லை யென்பதை முன்னறிந்துகொண்ட நமது நண்பர் சேதுபதியவர்களின் மனம்மகிழுமாறு ஒரு நுணுக்கமான சிறப்புச்செய்து புகழ் பெற்றார். அதாவது:— சேதுபதியவர்கள், மற்ற ஆடம்பரமான வரவேற்பு முதலியவை விரும்பிலரேனும், வைதீகமான சிவபூசை வழிபாட்டில் மிகப் பற்றுடையவர் என்பதும், அதனைச் சிறக்கச் செய்வதில் கருத்துடையவர் என்பதும் தெரிந்துகொண்ட நண்பர், அதற்குரிய துணைக்கருவிப் பொருளை (உபகரணங்களை)ச் சிறப்பாக செய்து வைத்திருந்தார்.

ஓர் தனியான இடத்தில், முழுதும் பசுந்தழைகளாலே (பர்ணசாலை) மணவறை போன்ற மண்டபம் அமைப்பித்து, அர்ச்சனைக்குரிய முக்கியமான பலவகை மலர்களைத் தருவித்து வெவ்வேறாக பலவகைத் தட்டுகளில் வைத்து, இளந்துளிர்களான பலவகைப் பச்சிலை (பத்திரங்)களையும் அவ்வாறே அமைத்து வைத்து, பூசைமடத்துக்குப் போகும் வழியெல்லாம் சாம்பிராணி முதலிய நறுமணங் கமழுமாறு பல இடங்

களில் குங்கிலியக்கலய தூபங்கள் நிறைந்திருக் கும்படி செய்வித்து, அவ்விடத்தில் ஊழியஞ் செய்யக் காத்திருக்கும் தொண்டர்கள் ஒவ் வொருவரையும் கண்டத்தில் உருத்திராக்கமணி கள் அணிவித்து, கற்பூர தீபாராதனை ஆன உடனே, **தேவார திருவாசகம்** பண்ணோடு ஓது வதற்குத் தகுதியான ஓதுவா மூர்த்திகளையும் அங்கு ஆயத்தமா யிருக்கும்படி ஏற்படுத்தி ஏனைய பிறவும் இணக்கமாய் நடக்குமாறு எல் லாம் முன்னரே அமைத்திட்டனர். மேலும், பூசை சமயத்தில் அரவம் சிறிதும் இல்லாமல் அமைதியாயிருக்கும் பொருட்டு அச்சமயத்தில் ஒருவரும் ஏவாமலே எல்லாம் ஒழுங்காய் நடை பெறுமாறு அவ்வாட்களைப் பழக்கியும் வைத்தி ருந்தார். பக்தியிற்சிறந்த சேதுபதியவர்கள், திருக்கைலாசம்போல் தோன்றிய பூசை மடத் தின் அமைப்பும் சிறப்புங்கண்டு வியந்து பேரின் பத்தில் (பரமானந்தத்தில்) மூழ்கினவராய் ஐம் புலனும் ஓர் புலனாக ஒடுங்கியமனத்துடன் உள்ள முருகிச் சிவவழிபாடு செய்து முடித்தார். அப் பால், பாஸ்கர சேதுபதி யவர்கள், தீர்த்தபதி யவர்களிடத்தில் சாவகாசமாய் உரையாடிக் கொண்டிருக்கையில் தாம் வேறிடங்களில் கண்

டாததும் சிறிதும் எதிர் பாராததுமாகிய சில சிறப்புக்களை, சிங்கம்பட்டியில் புதுமையான பூசை மடத்தில் கண்டு வியப்புற்றதைப்பற்றிச் சொல்லிய பின், இவ்வளவு யூகமாக அமைப்பித்த, அவ்விதற்கருத்தா இன்னார் என்பதும் தெரிந்து கொண்டார். இதனால் நம் நண்பர் தாம் செய்யும் எந்தக் காரியத்தையும் திருந்தச் செய்வதுடன், சில சமயங்களில் பிறர் வியக்குமாறு செய்யும் ஆற்றலும் உடையவர் என்பது தெரிந்துகொள்ளற் பாலது.

நீதிநெறித் தாலாட்டு:— முன்னொரு சமயத்தில் இச்சரித்திரம் எழுதுவோர் இயற்றிய நீதிநெறித் தாலாட்டையும் அத்துடன் சேர்க்கப்பட்டிருக்கிற திருமண வாழ்த்தையும் ஆக்கியோன் வேண்டுகோளுக்கிணங்கி நண்பர் பார்வையிட்டார். சில இடங்களில் கொள்கைக் குரிய கருத்து நன்கு விளங்கும்படி சொற்களை மாற்றி அமைப்பது நலம் என்று குறிப்பித்தார். அப்பால், தாலாட்டும், வாழ்த்தும் பெண்களுக்குரியதாகையால், அவர்களுக்கு ஏற்ற நடையில் அமைந்திருக்கிறதாவென்று நண்பரிடத்தில் கேட்டேன். உடனே தமது மூத்தமகள் (அப்போது தற்செயலாய்ப் பிறந்த வீட்டிற்கு வந்திருந்த

சங்கரவடிவம்மாளை அழைத்து, என்னிடமிருந்த கையெழுத்துப் புத்தகத்தை வாங்கி அவள் கையில் கொடுத்துப் படிக்கச் சொன்னார். அந்த அம்மாள் தட்டுத்தடையின்றி பொருள் நன்கு விளங்கும் நடையில் வாசித்தாள். நண்பர் மகளை நோக்கி "நீ வாசித்ததின் பொருள் முழுதும் உனக்கு நன்றாய் விளங்குகிறதா? என்று கேட்டார். அவள் "ஆமாம்" என்றவுடனே, நண்பர் என்னை நோக்கி "நீங்கள் செய்த வேலை பயன்படுவதாயிற்று. இனி, கூடிய சீக்கிரத்தில் அச்சிட வேண்டியதுதான்" என்று சொல்லி என்னை அனுப்பிவிட்டார். இங்ஙனம் நண்பர் செய்த நன்றியை நன்குணர்ந்து, நீதிநெறித் தாலாட்டு முகவுரையில் வெளியிட்டுள்ளேன். இவர் தனி நூலாக எதுவும் இயற்றிலரேனும் பாட்டு இசைக்கும் ஆற்றலுடையவரா யிருந்தபடியால அத்தகையோர்க்கு உதவி செய்யும் தகுதியுடையராயுமிருந்தார்.

## 21. பாட்டிசைத்தலும், பண்ணறிவும்

பிச்சைக்காரிமேற் பாட்டு:— நண்பர் தம் இளமைப்பருவத்தில் தம்முடனபடிக்கிற கூட்டாளியுடனிருக்கையில் அவ்வீட்டு வாசலில் பிச்சை

பெடுக்கவந்த ஒரு சிறு பெண், பெருங்கூச்ச லோடு பாடிக்கொண்டிருத்தலைக் கேட்டு கூட இருந்தவர் நண்பரை நோக்கி "இப்பெண்ணைப் பற்றி நீர் ஒரு வெண்பா பாடமுடியுமா?" என்றார் உடனே,

> "இச்சையுடன் இரங்கி ஈவார் தம் வாசலிலே
> பிச்சையெடுக்கின்ற பெண்பிள்ளாய்-உச்சிதமாய்
> கூப்பிட்டுப்பாடுங் குயிலே உனக்கு நல்ல
> மாப்பிள்ளை தான் வருகுவான்"

என்று நம் நண்பர் பாடிமுடித்தார். இது ஒரு சாதாரணமான பாட்டுத்தான். ஆயினும் பாடினவரின் பருவத்தையும், தூண்டிய உடனே தடையின்றி ஒரு மூச்சிலே பாடி முடித்ததையும் எண்ணிப் பார்த்தால் மெச்சத்தக்கதாகும்.

இற்றைக்கு ஒரு வியாழவட்டத்திற்கு முன், நமதுநண்பரும் திருவாளர். கைலாசம்பிள்ளையும் யானும் ஒரு நாள் ஊருக்கு வெளியே போய் உலாத்திக்கொண்டிருக்கையில் பண்டைத்தமிழ்ப் புலவர்களைப்பற்றிப் பேச்சு நிகழ்ந்தது. அப்போது, கைலாசம் பிள்ளையவர்கள், சிலேடைக் கவிகளை அக்காலத்தவர் எப்படிப் பாடினார்கள் என்று வியப்புடன் கேட்க, நண்பர், சிலேடைக் கவிபாடுதல் எளிதன்றுதான். ஆயினும் நீங்கள்

நினைக்கிறபடி அத்துணை ஆச்சரியப்படத் தக்க தன்று என மறுமொழி கூறினர். உடனே கை:—நீங்கள் பாடுவீர்களா? என்ருர் நண்பர்:— ஒருவாறு பாடலாம். ஆயினும் அதெல்லாம் சமயவாய்ப்புக்குத் தக்கபடி வரும் என்ருர். கை :—சாலையில் முன்னின்ற மரத்தைக்காட்டி மரத் துக்கும் மனிதனுக்கும் பாடுங்கள் பார்ப்போம்" என்ருர். நண்பர்:—அப்படிக் கண்டதற்கெல்லாம் திடீரென்று பாடமுடியுமா? என்று மறுமொழி சொல்லி நின்றபடியே சிறிதுநேரம் யோசித்துக் கொண்டிருந்தார். இவர்கள் உரையாடலைக் கேட்டுக் கொண்டிருந்த யானும் அந் நிலையில் வேறு பொழுதுபோக்கின்றி அதைப்பற்றியே நினைத்துக் கொண்டிருக்கும்படி நேரிட்டது. அப்பால் சில விநாடிக்குள் நண்பர் பின்வரும் வெண்பாவைச் சொன்னர்.

பட்டையுடையாக்கொளலாற் பல்கிளையும் பேணுத
கட்டையுறுதிபெறக் காண்கையால்-கொட்டை[லால்
கனிகாய்க்கா என்றும் கருதிவளர்க்கும்
மனிதனேடொக்கும் மரம்.

என்றுநண்பர் சொல்லி முடித்தவுடனே யானும் என் மனதில் வந்ததைச் சொன்னேன். அது வருமாறு,

மண்ணை நிலையாக்கொளலால் மல்லுக்கு கைதாலால்
பண்ணை நனிவிரும்பும் பண்பினுல்—பெண்ணை
இனிதுவந்து கொண்டியற்றும் ஈசன் படைப்பில்
மனிதனே டொக்கும் மரம்.

இவ்விரண்டும் சிலேடைக்கு எடுத்துக்காட்டாகக் கொள்ளத்தக்க அத்துணை சிறந்த பாக்களல்லஆயினும் உண்மைச் சரித்திரத்தில் நாணமின்றிவெளியிடுதலே கடமையாம் என்று கருதினேம். ஆகையால் வேருெரு சமயத்தில் சொல்லப்பெற்ற இவைபோன்ற இரு பாக்களையும் ஈண்டு வெளியிடலாகும். மேற்படி செய்தி நிகழ்ந்து சில மாதங்களான பின்னர் நண்பர் வீட்டில் நாங்களிருவரும் உரையாடிக்கொண்டிருக்கையில், நண்பர் "வைத்தியருக்கும் வேசியருக்கும் சிலேடை சொல்லலாமா?" என்று என்னைக் கேட்டார். என்னுல் இயலாது என்றேன். முயன்று பாருங்கள் என்ருர். அவர் யாதோ கையிருப்பு வைத்துக்கொண்டு தான் என்னைத் தூண்டுகிருர் என்று குறிப்பறிந்து, நான் ஏதேனுஞ் சொன்னுல் பின் நண்பர் மனதிலுள்ளது வெளிவரும் என்ற நம்பிக்கையுடன் சிறிது நினைத்துப் பார்த்ததில் வந்ததைச் சொன்னேன். அதுவருமாறு:—

கைகாட்டப்பார்த்தலால் கட்குறிப்பால் ஓர்ந்திடலால்
மையூட்டி மேலும் மருந்திடலால்—மெய்காட்டி
இன்புதவும் வாகடரும் ஏழைக் கணிகையரும்
மன்பதையுள் ஒப்புடையார் மன்.

இதைக்கேட்ட நண்பர் நான் எதிர்பார்த்த படியே பாட்டுச் சொல்லத் தொடங்கினர். அது வருமாறு,

புத்தமுதம் தந்திடலால் பூசுதயிலம் தாலால்
முத்தங்கொடுக்கும் முறைமையால்—பத்தியங்கள்
பக்குவமாய்ச் சொல்லும் பாத்தையரும் பண்டிதரும்
ஒக்குமுறை உண்டென்றுரை.

யான் இப்பாவைக் கேட்டு மகிழ்வுற்றவுடனே, "முத்தங்கொடுக்குமுறை" என்ற சொற்றொடரின் இரட்டுறு பொருள் தான், வைத்தியருக்கும் வேசிக்கும் சிலேடை சொல்லலாம் என்று உங்களைத்தூண்டியது போலும் என்றேன். நண்பர் ஆமென்றார் [வயித்தியர், முத்து அங்கு ஒடுக்கும் முறையாவது—முத்துக்களை நீற்றிப் பஸ்பம் செய்தலாம்].

இனி நண்பரின் கண்டதிசயம் பாடலாகிய சமயோசிதப் பாடல்களில் இரண்டை இங்கெடுத்துரைப்போம். நண்பர், நகரப்பாதுகாப்புச் சங்கத்தின் அங்கத்தினராகவும் (முன்சிபல்

கவுன்சிலர்) திருவாளர் பி.எம். கைலாசம்பிள்ளை ஷை சங்கத்தலைவராகவும் இருந்து பல்லாண்டு களான பின்னர், தகாத மனிதரையெல்லாம் ஓட்டுக்காக அவரவர் வீட்டிற்குப்போய்ப் பார்த்துப் பேசித் தீரவேண்டிய சங்கடத்தை முற்றிலும் ஒழிக்கக் கருதி ஷை சங்கத்தின் தொடர்பை (சம்பந்தம்) அடியோடு ஒழித்துவிட்டார்கள். அங்ஙனம் விலகி சில நாளான பின் ஷை இருவரும் பேட்டைக் கடைவீதி வழியாக சவாரி போகையில் முன் கெருட வந்தனம் குதிரை வந்தனம் செய்துகொண்டும் சில கடைக்காரரைக் கண்டு வண்டியை விட்டு இரங்கிப்போய்ப் பேசுவதுமாகிய முந்திய செயல்களையும் இப்பொழுது ஒருவர் தயவையும் எதிர்பாராமற் போகும்படியான நிலைமை வந்ததையும் கருதியபடியே வண்டியில் போய்க் கொண்டிருக்கையில், இரும்புக் கடை ஒன்று எதிர்ப்பட்டது. அக்கடை முன் வண்டியை நிறுத்தி முதலாளியிடத்தில் (ஓட்டுக்காக) சிறிது பேசிவிட்டுப்போவது வழக்கம் அப்படியே குதிரையும் வண்டிக்காரன்குறிப்பறிந்து நிற்கும். ஆனல் இப்பொழுது அங்கே யாரிடத்திலும் பேசவிரும்பாத முதலாளி (எசமான்) குறிப்பறிந்த வண்டிக்காரன் நிறுத்தாமல் ஓட்டிக்கொண்டு செல்கையில் நண்பர், வாக்கில்

இயல்பாக வந்த வெண்பா வருமாறு:—

இரும்புக்கடையாரும் ஏனையரும் இப்போ
தரும்பிற்கடையராய்த் தோன்ற—விரும்பா
விதியின் செயல்என்று வெள்கினமே நெல்லைப்
பதியின்மேல் வைத்தபரிவு.

இது நிற்க திருவாளர் பி. எம். கைலாசம் பிள்ளை வீட்டில் குற்றேவல் செய்துகொண்டிருந்த, சுமார் 15 வயதுள்ள "சொக்கன்" என்னும் சிறுவன் தென்னைமரத்தில் தலைகீழாக ஏற வல்லவனும் மண்டபத்தின்மேல் ஏறி தெப்பக்குளத்தில் குதித்து நாற்புறமும் சுற்றி நீந்த வல்லவனுமா யிருந்தான். இவ்விரு நண்பர்களும் வழக்கமாய்ச்சவாரி போகும்போது ஷெ பொடியனும் கூடப்போவதுண்டு. அப்போதொரு நாள் அந்தப்பையனைப் பார்த்துச் சொன்ன பாட்டு:—

ஆலவாய் சென்றங்கரனடியைப் போற்றுபவர்
சாலப்புகழ்ந் தழைக்கும் பேருடையாய்—ஞாலத்தில்
தென்னைமரம் ஏறலிலும் தெப்பத்தில் நீந்தலிலும்
உன்னை நிகருண்டோ உரை.

சந்தர்ப்பத்துடன் நாங்கள் உரையாடுகையில் இவ்விரு வெண்பாக்களையும் நண்பர் சொல்லத் தெரிந்தேன். இது நிற்க, இனி இந்துகலாசாலைத் தலைவர் கோபாலகிருஷ்ண முதலியார் பிரிவில்

நண்பர் பாடிய பாடல்களைப் பற்றி P. M. K. வியந்து சொல்லக் கேட்டிருக்கிறோம். அது கைக்கு எட்டவில்லை.

பண்ணறிவ (சங்கீத ஞானம்): நமது நண்பருக்கு இயல்பாகவே பண்ணறிவுண்டு. சிறிது கேள்விப் பயிற்சியுமுண்டு. ஆனால் ஒலிநயம் (சாரீரம்) இல்லை. ஆயினும் அவர் பாக்களை வாசிக்கும் போதெல்லாம் சந்தத்தைத்தழுவியே வாசிப்பது வழக்கம். அத்துடன் பொருள் விளங்கும்படி நயம்படச்சொல்லும் ஆற்றலுடையவராதலால் கேட்போர் செவிக்கும் இனிமையாகவேயிருக்கும். தற்கால வழக்கிலுள்ள சுமார் 40 சாதாரண இராகங்களை இனங்கண்டு பெயர் சொல்லத் தெரிந்தவர். மேலும் பாட்டுக் கச்சேரிகளை ஆதரிப்பதுண்டு. பாடகர்களின் தாரதரங்களைச் சரியாய் மதிக்க வல்லவர். நாக சுரங்களையும் நன்றாய்க்கேட்டுச் சுவையுணர்வார். ஆகையால் இசைப்புலவர்களும் (சங்கீத வித்வான்களும்) இவர் தம் நட்பையும் ஆதரவையும் பெரிதும் விரும்பினார்கள்.

## 22. அறவழியிடர் (தரும சங்கடம்.)

நண்பர் தம்முடைய மூத்தமகனாகிய துரைசாமிபிள்ளைக்கு திருமண முயற்சி தொடங்குங்

கால் இருதலையிடரில் அகப்படலுற்றார். ஆயி னும் இது உலகத்தில் புதியதன்று. இடை இடையே நிகழ்வதொன்றும். ஆகையால் இதன் பொதுத் தன்மையை இங்கே சிறிது வெளியிடல் பொருந்தும். முறைப் பெண் முறை மாப்பிள்ளை என்றிருக்கிற இடங்களில் இருவகையாருக்கும் கொள்ளக் கொடுக்க எண்ணமிருந்தாலும் ஒருவ ரும் தம்மெண்ணத்தை முந்தி வெளியிடத்துணி வதில்லை. பெண் வீட்டார் "நம் நாட்டு வழக் கபபடி மாப்பிள்ளை வீட்டார் தாமே முதலில் வந்து பேசவேண்டியது" என்று எண்ணிக் கொண்டு மௌனமாயிருப்பார்கள். மாப்பிள்ளை வீட்டார் "நாங்கள் என்ன அசலா! அந்நியமா! புது சம்பந்தமா? நோக்கமிருந்தால் எங்களிடம் நேரில் வந்து பேசலாம்: அல்லது தூதனுப்பி யாவது பேசலாகாதோ?" என்றும் இன்னும் தமக்குத் தோன்றிய நியாயங்களையும் மனதில் எண்ணிக்கொண்டு வாய் பேசாதிருப்பார்கள். இப்படி முறை மாப்பிள்ளை முறைப்பெண் என் றிருக்கிற இடங்களுக்கு இவ்வுரிமை யில்லாத பெண் வீட்டாரேனும் மாப்பிள்ளை வீட்டாரே னும் போய்ப் பேசத் துணிவது பெரும்பாலு மில்லை. இந்தநிலைமையில் சிலஆண்டுகள் கழிந்து விடும். அப்பால் இருதலையாரும் "இனி எப்படி

யாவது இந்தஆண்டில் திருமணம் நடத்தித் தீர வேண்டும்'' என்று உறுதியுடனிருப்பார்கள். இடையில் ஒருதலையாரிடம் வேறு யாரேனும் வந்து திருமணப்பேச்சு நெருங்கினல், முறையுரிமையுடைய மறுதலையார்க்கு அதனல் யேற்படும் மனவருத்தம் மிகுதியாம். அப்பால் ஆத்திரம் அதிகப்படும்; ஆவலாதிகள் புறப்படும். இந்த நிலைமையில் இருவகைக்கும் வேண்டியவர்கள் தலையிட்டு முறையுரிமையுள்ள மண மக்களின் திருமணத்தை கொண்டு முடிக்கப் பெரு முயற்சி செய்வார்கள்.

அத்தகைய முயற்சியால் ஆவனவும் உண்டு. ஆகாதனவும் பலவே. இத்தன்மையான தர்மசங்கடம் ஒன்றில் நமது நண்பரும் முன்கூறியபடி, துரைசாமிபிள்ளையின் திருமணமுயற்சி தொடங்கும்போது சிறிது இடர்ப்படல் நேர்ந்தது. மாப்பிள்ளைக்கு அத்தை மகளாகிய முறைப்பெண்ணுமிருந்த படியால், பெண் பார்த்துத் தெரிந்து தெளிவதில் மிக உழைக்க வேண்டியதாயிற்று. முடிவில் வேறிடத்துப் பெண்தான் உறுதிப்படலாயிற்று. ஆயினும் பழமையை ஆதரிக்கும்படி வாய்க்காமற் போனதுபற்றி நண்பர் வருத்தமுற்றிருந்தார் என்பது பின்னல் தெரிய வந்தது.

எவ்வாறெனில், அத்திருமண அழைப்புக்கிணங்க நான் நேரில்போய் வாழ்த்திக்களிப்புற இயலாத நிலைமையிலிருந்த காரணத்தால், வாழ்த்துக் கவி ஒன்று எழுதி அனுப்பினேன். அப்பால் ஒரு சமயத்தில் நண்பரை நான் நேரிற் கண்ட பொழுது,—"உங்கள் வாழ்த்துக்கவி நல்ல சமயத்தில் வந்தது. அப்பொழுது என் மனதில் இருந்த வருத்தத்திற்கு அது ஒருவாறு ஆறுதலைக்கொடுத்தது. உரிய நேரத்தில் அவ்வாழ்த்துப்பா, தக்கோரால் வாசிக்கப்பெற்றது." என்றார். அது வருமாறு;—

[வைத்தோய்

பணமுடையோர்க்கும் பருவத்துதவு பண்டாரம்
குண மிகக்கற்ற தமிழ் நாவலர் சபைக்கோர் தலைவ!
புணர்மிகும் நின்புதல்வன் மணமேரும் பொருத்தங் (கண்டோம்
மணமிகும் பிச்சிதுரை தோளிற்சேர்தல் மகிழ்வுடைத்தே.

இனி, இதையொட்டி இவ்விடத்தில் தெரிந்து கொள்ளத்தக்க ஒரு செய்தியை வெளியிடுகிறோம். நம் நண்பர் வாழ்நாளில், மேற்குறித்த துரைசாமிபிள்ளையுள்பட ஆண்மக்கள் இருவர் பெண்மக்கள் இருவர் ஆகிய நால்வருக்குத் திருமணம் நிறைவேறியது. முதலாவது திருமணத்

தில், முறைமை என்னும் உரிமையை எண்ணி யது காரணமாக முதலில் ஒரு சிறிது கவலைக் குட்சிக்குமாறு நேர்ந்தபடியால், அப்பால் அதற் கிடமில்லாதபடி, " சம்பந்த விஷயத்தில் முக்கிய மாய்க் கவனிக்கவேண்டியது " இனமும் குண முமே" யாம் என்னும் கருத்துடையாராயினர். ஆயினும் நண்பர் நனிவிரும்பிய இவ்விரண்டுடன் பிந்திய சம்பந்தங்களிலும் எல்லாநலங்களும் இனிது வாய்ந்துள்ளன. முதல் மகனாகிய துரை சாமி பிள்ளைக்கு பேட்டை திருவாளர் வெ. மு. வாலசுப்பிரமணியபிள்ளை திருமகள் பிச்சம்மாள் வாழ்க்கைத்துணையாக வாய்த்தனள். முதல்மக ளாகிய திருமகள் சங்கரவடிவம்மாளுக்கு பாளை யங்கோட்டை திருவாளர் இராசகோபாலபிள்ளை புதல்வர் சீதாராமபிள்ளையும், இரண்டாவது திரு மகள் பாப்பம்மாளுக்கு சேரன்மாதேவி திரு வாளர் நமசிவாயம்பிள்ளை புதல்வர் பால்வண்ண சுந்தரம்பிள்ளை (B. A. உதவி எஞ்சினீர்) யும் மணவாளர்களாக அமைந்துள்ளார்கள். இனி இரண்டாவது மகனாகிய அருணாசலம்பிள்ளைக்கு தெற்குக் கடையம் திருவாளர் சாவடி நாராயண சாமிபிள்ளை திருமகள் அம்மாக்குட்டி யென்ற பேச்சியம்மாள் மணமகளாயினாள்.

## 23. ஜமீன் சீர்திருத்தங்கள்.

முன் "மேற்படிப்பு" என்னும் 7-வது பிரிவில் கூறியபடி (பக்கம் 14) நமது நண்பர் சட்டப்பரீட்சையில் தேறி, வழக்கறிஞர் (நியாயவாதி) ஆனகாலத்தில் ஜமீனைவிட்டுப் பிரிய நேரிடும்போலிருந்த சமயத்தில், ஆசிரியருக்கும் மாணவருக்குமுள்ள அன்பின் தகைமைக்கேற்ப இருவரும் பிரிந்தும் பிரியாதிருப்பதற்கு வேண்டியதற்குரிய ஏதுக்கள் திருவருளால் அமைந்துள்ளனஎன்பது இங்கு இப்பொழுது வெளியிடப்போகும் செய்திகளால் இனிது விளங்கும். அதுவரை மாணவராயிருநத மைனர் ஜமீன்தாரவர்களுக்கு, தக்க பருவமாகிய வயது வந்தவுடனே அரசாங்கத்தார் ஜமீன் ஆட்சியை உரியவர் இடத்தில் ஒப்பிக்கும்போது, சிங்கம்பட்டி மலை சம்பந்தமான மலை போன்ற மன்ருட்டு வழக்கை (வியாச்சியம்) யும் கூடவே ஒப்பித்தார்கள். ஜமீனுக்கு கிடைக்கும் ஆட்டை (வருட) வரும்படியில் சரிபாதிக்கு ஆதாரமாயுள்ளதும், பரம்பரையாக ஜமீனுக்கு உரியதுமாகிய மலங்காடுகளை, அரசாங்க அதிகாரிகள் (கோர்ட் ஆவ் வார்ட்ஸ்) காலத்தில் எப்படியோ "ஜமீனுக்கு சம்பந்தமில்லை என்னும் நிலைமைக்கு கொண்டு வந்து விட்டார்கள். இந்த நிலைமையில் தமக்கு

அதுவரை ஆசிரியராயும் தோழராயும் இருந்த தக்கோர் தம்மை விட்டுப்பிரிவது ஆறறுெணுக் கவலைக்கு ஏதுவாய் இருந்தபடியால், நமது நண் பரை ஜமீனுக்கு மேற்பார்வையாளராக (மானே ஜர்) இருக்கவேண்டுமென்று ஜமீன்தாரவர்கள் கேட்டுக்கொண்டார்கள். நண்பருக்கோ, தாம் ஒரு வழக்கறிஞர் (நியாயவாதி) ஆக முன்வர வேண்டுமென்ற விருப்பம் மிகுதியாயிருந்தது. ஆயினும் மலை வழக்கை மன்ருடி வெற்றி பெற வேண்டியதை எண்ணியும், முன் அனுபவம் சிறிதும் இன்றி புதிதாய் ஜமீன் ஆட்சியை ஒப் புக்கொண்ட குறுநில மன்னருக்கு அரசாட்சி முறையிலும் நடையிலும் துணைநின்று உதவி புரிவது தம் கடமையெனக் கருதியும் அமைச் சர் வேலையை மறுத்துரையாமல் ஏற்றுக்கொள் ளும்படி நேரிட்டது. முதலில் சிறிது சடை யோடு ஏற்றுக் கொள்ளவேண்டியது போல் தோன்றினும், காரியத்தளவில், அது பழம் நழு விப் பாலில் விழுந்தது போலாயிற்று. சட்டப் பரீட்சையில் தேறி "வழக்கறிஞர் வேலை தொ டங்குவதற்கு "முதல் வழக்கு யார் கொண்டு வருவார்?" என்று ஆவலாய் எதிர்பார்த்திருக்க வேண்டிய தருணத்தில், எல்லா விதத்திலும் சிறந்த மேலான சமஸ்தான வழக்கை, தம்

சொந்த வழக்காகவே கருதி நடத்தவேண்டிய பொறுப்பும் அதற்குரிய உயர்பதவி (அமைச்சர்) யும் வலியவந்து கிடைத்ததென்றால் இதற்கு மேலான செல்வமும் உண்டோ? ஆயிரக்கணக்கான வழக்கறிஞரில் (வக்கீல்) யாருக்கேனும் தொடக்கத்தில் இப்படிவாய்த்திருக்குமா? வாதியோ மிக உரிமையுள்ள சிறந்த ஜமீன்தாரவர்கள். பிரதிவாதி யோவென்றால், உலகத்தில் எல்லாம் மேலான அரசாங்கத்தார். ஏறபட்ட வழக்கோ எல்லா நியாய மன்றங்களையும் தாண்டிக்கடந்து சக்கரவர்த்தினியார் சபைவரையும் போய் முடிவான முடிவு பெறவேண்டியதாயமைந்தது. மேலும் மேலும் வாதிபக்கமே வெற்றி! முடிவில முற்றிலும் வெற்றி முழு வெற்றி. நமது நண்பர் தொடங்கிய முதல் வழக்கிலேயே பெரும்புகழுக்குரியவராயினர். இது நிற்க. நம் நண்பர் அமைச்சர் வேலையை ஏற்றுக்கொண்டனர் எனினும், மலை வழக்கை முன்னிட்டு அப்பொழுது உடனே செய்யவேண்டிய வேலைகள், பெரும்பாலும் திருநெல்வேலி நியாய மன்றங்களில் சம்பந்தப் பட்டவைகளாயிருந்தன. அக்காலத்தில் திருநெல்வேலிக்கு மேற்கே நீராவித் தொடர் நிலை வண்டி கிடையாது. மோட்டார்காரும் வரவில்லை. ஆகையால் நண்பர் குடித்தனம் திரு

நெல்வேலியில் வைத்துக்கொள்ள வேண்டியதா யிற்று. ஆகவே, ஜமீன் அரசாட்சியை சிங்கம் பட்டியிலிருந்து நேரிற் பார்த்து நடத்தும்படி தன் மனதிற்கிசைந்த ஒரு தகுதியான மனி தரை நியமித்துக்கொண்டு, தாம் நிலைவரமான ஆலோசனை கர்த்தராக ( Standing Council ) அமர்ந்துகொண்டு இரு வகையான வேலைகளுக் கும் தாமே பொறுப்பாக இருந்து நடத்திவந் தார். கல்விச்சாலைகளில் புதிதாய் வந்த ஆசிரி யரை சில மாணவர் ஆழம்பார்க்கத் துணிவது போல், புதிதாக பட்டத்துக்கு வந்திருக்கிற ஜமீன்தாரவர்களையும் உதவியாக வந்திருக்கும் புதிய பொறுப்பாளரை (மானேஜர்)யும் குடிகள் பதம் பார்க்க முயன்றார்கள். அக்குடிகள் முந் திய ஏற்பாட்டின்படி அறுப்புக்களத்தில் வாரம் பிரித்தளக்கவேண்டிய நெல் தீர்வையை முறைப் படி செலுத்தாமலும், அதனால் வருங்கேடு இன் னதென்றறியாமலும் ஒழுங்கீனமாய் நடக்கத் துணிந்து விட்டார்கள். கலவரம் செய்யவும் தொடங்கினார்கள். ஆகையால் குடிகளுக்கும் ஜமீனுக்கும் தொடுத்துரை வழக்கும் (சம்மெரி வியாச்சியம்) தண்டவழக்கும் (கிரிமினல் கேசும்) ஏற்பட்டன. அச்சமயம்நமது நண்பர் தலையிட்டு குடிகளை சாம, தான, பேதங்களாகிய முதல்

மூன்று உபாயங்களால் நயமாக சமாதானப்படுத்தியதும் அன்றி அப்பால், குடிகளுக்கும் ஜமீனுக்கும் நிலைவரமான சமாதானமும் அந்நியோந்நியமும் எப்போதும் நிலைத்திருக்கும்படிக்குத்தகுந்த ஏற்பாடுகள்செய்துவைத்தது வியந்து பாராட்டத் தக்கதேயாம்.

மேலும் வாரம் பிரிப்பதாகிய வழக்கத்தை மாற்றி, நிலைவரமான நெற்கட்டுக்குத்தகை அளக்கும்படி ஏற்படுத்தினர், குத்தகை அளப்பதில் குடிகளுக்குச் சிறிதும் வருத்தம் தோன்றுதிருக்கும்படி நஞ்சைநிலங்களில் அதிகமேனி காணும்படிக்குரிய ஏற்பாடுகளும் செய்துகொடுத்தார். பல ஆட்டு மந்தைகளைத் தருவித்து வைத்துக்கொண்டும் பல வகையான உரங்களை வருத்திவைத்துக்கொண்டும் பசுந்தழைகள் ஏராளமாய் கிடைப்பதற்குரிய வசதிகளை அமைத்துக்கொண்டும், குடிகள் நிலங்களில் உரம் வைக்கும்படி திட்டப்படுத்தி அவற்றின் விலைப்பணத்தை வட்டியன்னியில் மாசூலில் எடுத்துக்கொள்ளும்படி திட்டஞ்செய்தார். மேலும் பலவகை நல்ல தானியங்களையும் தருவித்து நவதானிய விதைக்களஞ்சியமும் ஏற்படுத்தினர். விதைகளும் அவரவர்களுக்கு வேண்டுமளவு கொடுக்கப்படும் என்

றும் கிரையத்தை வட்டியில்லாமல் மாசூலில் செலுத்தலாமென்றும் முரசறைவித்தார். மேலும் உழவுமாடுகள் வாங்கவும், பயிற்தொழிற்கிடுசெலவிற்காகவும் அவரவர் தகுதிக்கேற்ப வேண்டிய தொகைகள் குறைந்த வட்டிக்குக் கொடுக்கப்படும் என்பதும் தெரிவிக்கப்பட்டது. அன்றியும், ஜமீன் குடிகளுக்குரிய ஆடு மாடுகள் தீர்வையின்றி மேயும் பொருட்டு ஜமீன் மலையில் ஒரு தனியிடம் குறிப்பிட்டு விடப்பட்டது. இன்னும், உழு தொழிலாகிய பயிர்த் தொழிலுக்கு வேண்டிய மரச்சாமான்களுக்கும் குடிகளுக்கு வீடுகட்டிக்கொள்வதற்கு வேண்டும் தடி முதலானவைகளுக்கும் மலையிலிருந்து விலையின்றிப் பெற்றுக் கொள்ளும்படி அனுமதிச் சீட்டுக் கொடுக்கப்பட்டது.

இன்னும் ஜமீன் குடிகளில் வீடுகளில் நடக்கும் நன்மை தீமைகளாகிய சிறப்புச் செயல் (விசேஷங்கள்) களுக்கு அவரவர்கள் தகுதிக்கேற்ப நன்கொடை அளித்து வரும்படி ஏற்பாடு செய்தார். தை மாதப்பிறப்பு, ஆடி அறுதி முதலிய சிறந்த நாட்களில் ஜமீன்தாரும் குடிகளும் அரண்மனையில் சந்திக்கும்படி ஏற்பாடு செய்து அங்ஙனம் சந்திக்க வந்தவர்களுக்கு

அன்பு பாராட்டி அவரவர்கள் தகுதிக்குத்தக்க வாறு உபசாரணைகள் செய்வித்தும் வந்தார். மேலும் ஜமீன் உத்தியோகங்களுக்கு பெரும்பா லும் அவ்விடத்துக் குடிகளிலேயே தக்கோரைத் தெரிந்தெடுத்து நியமித்துக் காரியங்கள் ஒழுங் காய் நடைபெறுமாறு செய்வித்துவந்தார். மே லும் ஜமீன் குடிகளில் பொருளும் கல்வியும் நுண்ணறிவும், உடையவர்களாய், வேறு வேலை யின்மையாலும் நல்வழியிற் பொழுது போக்கத் தக்க வழி தெரியாமையாலும், வம்பு வழக்கில் தலையிடுதலும், அத்தன்மையான வழக்குகளைத் தூண்டிவிடுதலும், மூட்டிவிடுதலும் ஆகிய செ யல்களையே தமக்குற்ற நற்றொழிலாகக் கொண் டிருப்பவர்களைப் போன்றவர்கள் சிலர் அங்கங் கிருப்பதுபோல் சிங்கம்பட்டி சமஸ்தானத்தின் குடிகளிலும் அப்பொழுது சிலர் இருந்தார் கள். அத்தகையோர்களை நம் நண்பர் ஆராய்ந்து தெரிந்தெடுத்து அவர்களுக்கும் பொருத்தமான உத்தியோகம் அமைத்துவைத்தார். சமஸ்தான நியாயமன்றத்திற்கு வரும் வழக்குகளுக்கு பெ ருந்தகைவழக்கறிஞராக அன்னோரை அமைத்து வைத்தார். ஆனபடியால், அவ்விடத்தில் வம்பு வழக்குகள் குறைந்து விட்டன. இயல்பாய் வரும் வழக்குகள் பெருந்தகை வழக்கறிஞர்க

ளால் பஞ்சாயத்து முறையில் ஆராய்ச்சி செப்பப்பட்டு நடுநிலை தவருத நீதி தீர்ப்புச்செய்யப் பெற்றன. அப்பால் அங்குள்ள குடிகளுக்கும் ஒற்றுமை ஏற்பட்டு எல்லாரும் அன்பினுல் கட்டுண்டு சிறப்புற்று வாழ்வாராயினர். ஜமீன் அரசாட்சி சுகநிலையுற்றது. அரசியலுக்கு முக்கிய அங்கமாகிய அமைச்சர் கடமையில் இதனினும் மிக்கதுளதோ? இப்பெரும்புகழுக்கு நமது நண்பர்உரிமையாளராயினதை எண்ணிப் பெரிது மகிழ்கின்ருேம். இது நிற்க.

**மலை வழக்கு, "ஜமீன் சீர்திருத்தங்கள்"** என்னும் இப்பிரிவில் முன் சுட்டிய மலைவழக்கு, ஜமீன் வாதியாகவும் அரசாங்கத்தார் (சர்க்கார்) எதிர்வாதியாகவும் ஏற்பட்டது. இது முதலில் சப்கோர்ட்டில் தாக்கல் செய்யப்பட்டு, அப்பால், சில்லாக் கோர்ட்டுக்கு மாற்றப்பட்டது. விசாரணை முடிவில், வழக்கிடப்பட்ட மலைகள், நீடித்தகாலமாகச் சமீன் ஆளுகையில் இருந்து வந்திருக்கிறதென்றும் ஆனுல் முழு உரிமை (சர்வ சுதந்தர பாத்தியம்) ஜமீனுக்கு கிடையாதென்றும்,முழுஉரிமை சர்க்காருக்குத்தான்உண்டென்றும், சர்க்காருக்குட்பட்டுச் சில உரிமையுடன் ஜமீன் அனுபவிக்கலாம் என்றும் சில்லா நீதிபதி

யால் தீர்ப்புச் சொல்லப்பட்டது. அப்பால் சென்னை உயர்தர நியாயமன்றில் (ஜில்லாக்கோர்ட்டில்) ஜமீன் பொருட்டாக மேல்வழக் (அப்பீல்) கிட்டதில் ஷை மலைகளின் முழு உரிமையும் ஜமீனுக்குத்தான் உண்டென்றும் சர்க்காருக்கு எவ்வித உரிமையும் கிடையாதென்றும் உறுதி கூறப்பட்டது (சித்தாந்தம் செய்யப்பட்டது). அப்பால் சர்க்கார் பொருட்டாக, பேராச் சங்கத்தில் (பிரிவி கவுன்சில்) எதிர்வாதம் செய்யப்பட்டது. ஷை மலைகள் ஆங்கில அரசாங்கத்திற்கே உரியனவென்றும்; ஒருகால், நெடுங்கால அனுபோகத்தால் ஜமீனுக்கு பாத்தியமாய்விட்டதாக ஏற்பட்டாலும், அம்மலைகள் ஜமீன் இஸ்திமிரார் சன்னதிற்காட்டப்படாததால் அம்மலைகளுக்குத் தீர்வை ஏற்படுத்தும் உரிமையாவது சர்க்காருக்கு உண்டென்று எடுத்துக் கூறப்பட்டது. அதின்பேரில் பிரிவி கவுன்சிலின் முடியுரை என்னவென்றால் ஷை மலைகளின் உரிமை முழுவதும் ஜமீனுக்குத் தானென்றும் சர்க்காருக்கு எவ்வித உரிமையும் கிடையாதென்றும், தீர்வை ஏற்படுத்தும் அதிகாரம் கூட சர்க்காருக்கில்லை என்றும் வெளியிடப்பட்ட தீர்ப்பேயாம். இத்துடன் மலை வழக்கு முறறினும் முற்றுப்பெற்றது.

போதிகைச் சிறப்பு:— இங்ஙனம் வழக்கிடத் தொடங்கி நெடுங்காலம் அரும் பெரு முயற்சி (பகீரதப் பிரயத்தனம்) யால் ஜமீனுக்கு மீட்கப் பெற்ற மலைதான் புகழ்பெற்ற பொதிகை மலை. தாம்பிரவருணி என்று மருவி வழங்குகிற "தன் பொருனை" ஆற்றின் பிறப்பிடம் இப்பொதிகை மலைதான். "வாண தீர்த்தம்" என்று சொல்லப் படுகிற கட்டம் இப்பொதிகை மலையின்பாலுள்ள ஓர் அருவித் துறையாம். இதில் ஆடி அமாவா யிற் பல்லாயிரம் மனிதர்கள் போய்த் தீர்த்தம் ஆடுவது வழக்கம். இதனையடுத்து மகாலிங்கம் பிரதிட்டை செய்யப்பட்ட ஒரு சிவ ஸ்தலமும் வேறு தெய்வங்களும் பிரதிட்டை செய்யப்பட்ட சொரிமுத்தையன் கோயில் என்னும் புண்ணிய தலமும் இம்மலையின்கண் ணுள்ளதேயாம். முத் தமிழ் இலக்கணமியற்றிய பேராசிரியராகிய அகத்திய முனிவர்க்கு உகந்த இடம் இதுவன் றோ? இப்பெற்றிபதாகிய பொதிகைமலையிலுள்ள தீர்த்தங்களில் தீர்த்தமாடுவோர்க்கு வேண்டும் வசதிகளை எல்லாம் பெருங்கருணை வள்ளலாகிய ஜமீன்தாரவர்கள் செம்மையாய் அமைத்துவைத் திருக்கிறார்கள். மேலும் அவர்கள் ஆடி அமா வாசி முதலிய புண்ணிய காலங்களில் அங்கே தீர்த்தம் ஆடப்போவதுடன் ஏற்படுத்திய திட்

டங்களெல்லாம் ஒழுங்காய் நடை பெறுகின்றன வா என நேரில்கவனித்துப் பார்ப்பதுண்டு. இக் காலத்திலும் அப்படியே நடந்து வருகிறது. ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகள் ஒருகால் பொதிகை மலை வாண தீர்த்தம் ஆடும்பொருட்டு அங்கே எழுந்தருளியபோது அத்தீர்த்தத்தின் பெருமை யும் ஜமீன்தாரவர்கள் அன்புறும் செயல்களையும் கண்டு மகிழ்ந்து, பொதிகை மலையுடையராகிய இப்பொழுதுள்ள ஜமீன்தாரவர்களுக்கு "தீர்த்த பதி" என்னும் காரணச் சிறப்பு பெயராகிய பட் டப்பெயர் கொடுத்தருளினர்.

இந்த மலைவழக்கை மலையினும்பெரிதென்று சொல்வது பெரிதும் தகும். வேலியே பயிரை மேய்வதுபோல், இவ்வழக்கில் துரைத்தனத்தார் எதிரியாயிருந்ததுமன்றி இடையூறுகவும் இருந் தார்கள். ஷைவழக்குக்கு வேண்டும் ஆதாரவு கள் (Records) பலவற்றிற்கும் அரசாட்சியாரி டம் (ஆபீசுகளில் இருந்து நகல்கள்எடுக்கவேண் டியதாயிருந்தது. "ஜமீன்தாரவர்கள் வகையரா கேட்கும் நகல்கள் கொடுக்கக் கூடாதென்று சில்லாக் கலெக்டர் பொதுவான ஒரு சுற்றுத் தாவு (Circular) அனுப்பியிருந்தபடியால், சர்க் கார் கட்சிக்கு மாறான ஆதாரவுகள் கிடைப்பது

அரிதினும் அரிதாயிற்று. சர்க்காருக்கு எதிர்க் கட்சியாகச் சாட்சிசொல்ல ஆட்கிடைப்பதும் குதிரைக்கொம்பாயிற்று. இப்படிப்பட்ட நிலை நிலைமையில் வழக்கை மேல்நடத்தி, எல்லாவற்றிற்கு மேலான நீதிமன்றுவரையும் போய் மன்றுடி வெற்றிபெற்றதற்கு இணையாகச்சொல்லத் தக்க உவமையும் உண்டோ? ஒருவன் சிறகில்லாமல், சந்திரமண்டலம்போய்ப் பயன்பெற்றுத் திரும்பிவந்த செய்தியோடொப்பிடலாம். காரியம் கைகூடும் பொருட்டு நண்பர்செய்த நல்வழியான உபாயங்களைப்பற்றி விபரமாய்ச்சொல்லப் புகின் மிகவிரியுமாதலால் இங்ஙனம் சுருக்கிச் சொன்னேனும். இவ்வழக்கில் கீழ திகாரிகள் போக்கு பலவாறுயிருந்தாலும் மேலுள்ளார் தன்மையும் ஆங்கில அரசியல்முறையும் புகழத்தக்கனவேயாம். இப்பெருமலைவழக்கு முடிவுற்று வெற்றியடைந்தபின், கனம் ஜமீன்தாரவர்கள் நண்பருடைய உழைப்பிற்கானப்பட்ட, ஊகம், ஊக்கம், உண்மை முதலிய செயல்களை நன்குணர்ந்து நன்குமதித்து நன்றிபாராட்டினார்கள். மேலும் தமது நன்குணர்வுக்கு அறிகுறியாக ரூ. 5000 (ஐயாயிரம்) பரிசளிக்கவிரும்பி இத்தொகையுடன் ஒரு கடிதமும் அனுப்பினார்கள். "மலைவழக்கில் தாங்கள் செய்தநன்றியை மறவா

திருத்தல் சாலுமேயன்றி வேறுகைம்மாறியற்றல் முடியாது. நன்றி மறவாமையின் அறிகுறியாக இச்சிறுதொகை அனுப்பபட்டிருக்கிறது. அன்புடன் பெற்றுக்கொள்க" இதுதான் அக்கடிதத்தின் கருத்துரையாகும். இது நிற்க.

## மறைந்த சோத்து.

மலைவழக்கு நடக்குங்கால் அதன்பொருட்டு ஜமீனிலுள்ள பழய முறிகளாகிய ஆதாரவுகளைச் சோதித்துப்பார்க்கையில் பழய புதையல் ஒன்று தென்பட்டது. அதாவது மலையாழம் சரகத்தில் திருவிதாங் கோட்டுப்பக்கத்தில் ஒரு பெரும் சொத்து, சுமார் 50 ஆண்டுகளுக்கு முன் ஜமீன் முன்னோர்களால் ஒரு சிறு தொகைக்கு ஒத்தி வைக்கப்பட்டிருக்கிறதென்று தெரியவந்தது. உடனே நம் நண்பர் அதற்கு முன்பின் உள்ள ஆதரவுகளையும் தேடிவைத்துக்கொண்டு முறையே வழக்கிடத் தொடங்கி திருவனந்தபுரம் உயர்நீதி மன்றத்றில் வெற்றிபெற்று ஷை சொத்தை ஜமீனுக்கு மீட்டிவைத்தார். ஷை சொத்து இருக்கிற இடத்திற்கு "காஞ்சிரஞ்கொண்டான்" என்பது பெயர். இது ஒரு லட்சத்திற்குமேல் மதிப்புள்ள சொத்து. ஒத்தி வைத்து மறந்து மறைந்துபோய் திருவருளால்

திரும்பக்கிடைத்தபடியால் இது ஒரு புதையல் எடுத்ததனம் போலாம். இது நிற்க.

ஜமீன் மலையின் கீழ்பாகத்திலிருந்து உற்பத்தியாகிவரும் மணிமுத்தா நதியிலிருந்து ஜமீன் நஞ்சை நீர்பாய்ச்சலுக்காக 'பெருங்கால்' என்ற ஒரு கால்வாய் பிரிகிறது. அந்தக்காலில் வரும் தண்ணீர் சர்க்கார் நிலங்களுக்கும் பாசனமாயிருக்கிறது. அப்படியிருக்க, ஜமீன் சர்க்கார் பார்வையில் இருந்த காலத்தில் ஷை பெருங்கால் மராமத்துச்செலவு முழுவதையும் ஜமீன்பணத்திலிருந்து செலவு செய்யப்பட்டிருந்தது. ஜமீன், உடையார் இடத்தில் ஒப்புவிக்கப்பட்டவுடனே ஷை மராமத்துச்செலவு தொகையில், சர்க்கார் பாகஊவுக்குள்ள, பதினுயிரத்துக்கு மேற்பட்ட தொகை நமது நண்பர் முயற்சியால் வாதாடி வாங்கிக்கொள்ளப்பட்டது.

மேலும் ஷை காற்பாசானத்திலுள்ள ஜமீன் நிலங்களெல்லாம் ஒருபூ நிலங்களானதால் இரண்டாம் போகத்துக்கென்று சர்க்காரால்போடப்பட்ட தீர்வையை ஜமீன் சர்க்கார்பார்வையிலிருக்கும்போது செலுத்திவந்தார்கள். ஷை ஜமீன் நிலங்களுக்கு சர்க்காரிலிருந்து தீர்வைவிதிப்பது

நியாயமல்லவென்று நமது நண்பர் வழக்காடிய படியால் முன்செலுத்தப்பட்டிருந்த ரூ.15,000ம் சர்க்காரிலிருந்து திரும்ப வாங்கப்பட்டது.

## அரண்மனையில் புதுக்கட்டிடங்கள்.

அரண்மனையின் பழையகட்டிடங்கள் பண்டைக்காலத்து நாட்டுப்புறப்பாங்கில் அமைக்கப்பட்டிருந்தபடியாலும் இக்காலத்துக்கு அது போதாதாயிருந்தபடியாலும் நமது நண்பர் சில கட்டிடங்கள் அதிகமாய் வேண்டுமென்று கருதினார். ஜமீன்தாரவர்கள் உபயோகத்திற்கு ஒரு நல்லகமும் (பங்களா), கலியாணமாலும், கொலுவிருக்கைமண்டபமும் (தர்பார் ஹால்), ஜமீன் அரசாட்சிக்குரிய பலதுறைவேலைகளும், தனித்தும் சேர்த்தும் நடைபெறுதற்குப் பொருத்தமான மாளிகையும்ஆகிய முக்கியமானமூன்றுகட்டிடங்களையும் செம்மையாகக் கட்டுவித்தார். மேலும் குதிரைகள் நிலயம், வண்டிநிலயம், முதலிய சில சில்லரைக்கட்டிடங்களையும் அமைப்பித்தார். இவற்றிற்குச்செலவான தொகை சுமார் ரூபாய் இரண்டு லட்சம். மேலவழக்குச்செலவு பெரிதாக நடந்திருக்கவும் ஜமீன் அரசாட்சிச்செலவு வழக்கப்படி ஒழுங்காய் நடந்துகொண்டிருக்கவும், ஷை கட்டிட வகைச்செலவிற்காகக் கடன்வாங்கா

மலே வரும்படியிலிருந்து செலவுபோக மிச்சம் பிடித்து அத்தனை கட்டிடங்களையும் கட்டி முடித்தார் என்ருல், நண்பர் எவ்வளவு செட்டாய்ச் செலவிட்டிருக்கவேண்டும்? எத்தனை வழிகளில் வருமானம் விருத்தியாகும்படி செய்திருக்க வேண்டும்? வரவு செலவு கணக்கினங்களை உற்றுப்பார்ப்பவருக்கே இவ்விபரம் தெரியவரும்.

### பரகதி அடைதல்

அன்பர்காள்! நமது நண்பரது முடிவு காலத்தில் நிகழ்ந்த செய்திகளைச் சுருக்கிக்கூறி இவ் வரலாற்றை முடிப்பது முறையாம். 1094-ம்ஷு அறுபத்துமூன்ருவது வயதில் பங்குனிமீ நண்பருக்கு முதுகில் ஒரு சிறு சிரங்குபோல் தடிப்புததோன்றிற்று. முதலில் அதை எளிதாக எண்ணி சிலநாள் கைப்பக்குவமாக சாதாரண வைத்தியம் செய்வித்துக்கொண்டிருந்தார். நாளுக்குநாள் அது பெரிதாகி ராஜப்பிளவையாகப் காணப்பட்டது அப்பால் டாக்டர் T. N. கோவிந்த அய்யர் வந்து வைத்தியஞ்செய்தார். சத்திரமிட்டார். மயக்கங்கொடாமல்கருவியிட்டும் நண்பர் அமைதியாய்ப் பொறுத்துக்கொண்டிருந்த தன்மையானது அவருக்கு இயல்பாயுள்ள மன உறுதிப்பாங்கையுணர்த்தியது. பின்ருல்,

ஒவ்வொருநாளும் புண்ணைக்கழுவிச் சுத்திசெய் யும்போதெல்லாம் தமக்குள்ள வருத்தத்தைக் காட்டாமல் நன்ருகக்கழுவிப் புனிதமாக்கும்படி கேட்டுக்கொள்வார். ஒருவாறு குணமாய் வருவ தற்குள்ளே இடதுகையில் பிளவைகண்டு, அத ஞல் சன்னிதோஷம் பிறந்து, குணத்துக்கு வரா மல் 1919-ம்வூ மேமீ 19-உக்கு 1094-ம்ளூ வைகாசிமீ 5-உ தாம்பிறந்த மூல நட்சத்திரத் தில், சிவபதம் அடைந்தனர்! சிவ! சிவ!!

## மரண சாதனம்.

நண்பர் தம்பிணிபலப்பட்டவுடனே, இனிப் பிழைப்பது அரிது என்று தோன்றியபடியால் தம்குடும்பத்தில், பின்னல் நடக்கவேண்டிய ஒழுங்குகளைப்பற்றிச் சிந்திப்பாராயினர். முன் னர்க் கூறியபடி இவருக்கு எழுத்தாளராகவும் உற்ற நண்பராகவுமிருந்த திருவாளர் திரவியம் பிள்ளையை அழைப்பித்துக் கலந்துயோசித்து இப்பொழுதே சொத்துக்களைப் பாகம்பண்ணி விடுதல் நன்றெனத் தீர்மானித்துக்கொண்டு அப் படிச்செய்துவிடத் தொடங்கினர்கள். பாக உடன்படிக்கைப்பத்திரம் எழுதிமுடிந்தது. பெண்மக்களுக்கும், அவசியமாகவேண்டிய அள வில் நன்கொடைகள் அளிக்கப்பெறறன. பத்

திரத்தில் அநேக பக்கங்களில் நண்பரின் (மூல புருஷரின்) கைச்சாற்றிடப்பட்டது. மற்றப்பக் கங்களில் நண்பர் கைச்சாற்றிடுமுன் பலக்குறை வால் கைதளர்ந்துவிட்டது. அப்பால் கைசரிப் படவில்லை. காலம்குறுகியது. மரணம் நெருங் கியது. பாக உடம்படிக்கைப்பத்திரம் பதிவு பெறுமற் போயிற்று. அப்படிப்போயினும் காரியம் மாறிப்போகவில்லை. அவருடையபிள்ளை களில் தகுந்தவயது வந்தவர்களும் (மேஜர்) இளைஞர்களும் (மைனர்) இவர்களெல்லாரும் நல்லகுணமுடையவராகையால் தந்தையின் கை யெழுத்துக்குறையை பொருட்படுத்தாமல் தந் தையாரின் நோக்கத்தின்படி நடப்பதே தங்கள் கடமை யென்றுணர்ந்து, பதிவாளர் (ரிஜிஷ்ட ரார்) முன்பு, மரணசாதனத்தை ஒற்றுமையுடன் ஒப்புக்கொண்டு பதிவுசெய்துகொண்டார்கள். இதனால் "மகனுரைக்கும் தந்தை நலத்தை" என்ற ஆன்றோர் வாக்கின பொருள் நன்குபுலப் படுகின்றது.

"மங்கலமென்ப மனைமாட்சி மற்றதன்
நன்கலம் நன்மக்கட்பேறு" என்றபடியால்,

இவருடைய பெண்மக்களும் மாண்புடையரா யிருப்பதற்கிணங்க அவர்கள் தம் மணவாளர்

களும், அத்தன்மையர்களாகவே வாய்ந்துள்ளார்கள், என்பதை முன்னேரிடத்தில் குறித்துள்ளோம்.

"பெறுமவற்றுள்யாமறிவதில்லை, அறிவறிந்த மக்கட் பேறல்லபிற."

## முடிவுரை.

மூன்று தாரம் மனைவியரை இழக்க நேர்ந்த துன்பம் இவர் இவ்வாழ்க்கையில் பெரிதாகத் தோன்றலாம். ஆயினும், அதுவும், வறுமையின்மையால் ஒருவாறு எளிதில் பரிகரிக்கப் பெற்றது. மற்றப்படி, நமதன்பர் மோக்கத்தில், இம்மையில் சிறந்தவாழ்வுடையராய் பிறர்க்கும் நல்வழிகாட்டிப் பரகதியடைந்தார்.

அறம்பொருளின்பம் வீடிவை நான்கையும்
திறம்படப்பெற்ற சீர்ச்சுப்பிரமணி
நிரம்புகல்வியும் நேர்மையும் கொள்பவர்
பரம்பொருட்பதம் பற்றுதல் பான்மையே

பிறந்தேழு நாளிற் பெற்றாள் பிரிந்தும்
பிழைத்துத் திகழ்ந்த புதல்வன்
சிறந்தே வளர்ந்து திருவே பொலிந்து
சீர்சான்ற மெய்யறிவினன்

அறந்தேர்ந்தலோடு பொருள் இன்பமுற்றி
 அருள்வாய்ந்தபின், பொய்யுடலம்
துறந்தேகினன்வீடினிதே எம்மண்ணல்
 தூய சுப்பிரமணியனே.

## அடைந்தநாள்.

தொல்லை ஆயிரத்து முப்பத்
 தொன்று வைகாசி மூலம்
செல்லப்பிள்ளைக்கு வாய்த்த
 செல்வன் சுப்பிரமணியன்
சொல்லரும்புகழில் தோன்றி
 தூயதன்மையனாய் வாழ்ந்து
அல்லல் அற்றறுபான்மூன்றில்
 அடைந்தனன் பிறந்தநாளே

திருவருளே துணை.

17—2—24. } மு. பொ. ஈ.

# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| vi | 16 | உணா்த்தி | உணர்த்தி |
| 3 | 4 | வயற்றில் | வயிற்றில் |
| 4 | 6 | தாய்க்கி | தாய்க்கு |
| 4 | 7 | மகளேபறி | மகளேபபறி |
| 5 | 2 | புதல்வரும் | புதல்வர் பிறந்தனர் |
| 7 | 8 | ஒனறிறகு | ஒன்றிற்கு |
| 12 | 24 | அறிவிற | அறிவிற |
| 19 | 5 | நிலமை | நிலைமை |
| 22 | 7 | எடுத்துறைக்க | எடுத்துரைக்க |
| 30 | 18 | பட்டும் | படும் |
| 31 | 17 | 14 பொதுநலம் | 13 பொதுநலம் |
| 33 | 24 | ஒருவாற்றேனு | ஒருவாற்றேனும் |
| 36 | 16 | முதலியன | முதலியன, |
| 42 | 4 | P. K. ராமய்யர் | B. K. ராமய்யர் |
| 43 | 17 | பராந்துகரி | பராந்துகறி |
| 47 | 10 | தன்னலம் | தந்நலம் |
| 47 | 13 | விபசாயம | விவசாயம். |
| 51 | 2 | ஒருவரேனும் | ஒருவாறேனும் |
| 45 | 17 | வரும்...... என்றார். | வரும்படியிலிருந்து சிறிதுபகாரச் சம்பளம் கொடுத்து வருவது மிகவும் பயனபடுவதாகும் என்றார். |
| 66 | 16 | படியால | படியால் |
| 87 | 9 | அமாவாயில | அமாவாசையில் |

# அருளானந்தக் களிப்பு.

—○—

(முத்திநெறி - மெட்டு.)

பல்லவி.

என்னகுறை? என்ன குறை?
இனிமேல் எமக் கென்னகுறை?

அநு பல்லவி.

தன்னிகரில் லாதவராம்-
தற்பரனைச் சார்ந்த நமக் — என்ன.

1 பன்னுகலை கற்றுணர்வோம்
பண்பொழுக்கம் பற்றி நிற்போம்
மன்னுயிர்க் குழைத்திடுவோம்
மக்கள் இனம் ஒன்றே என்போம்.

2 யாரிடத்தும் அன்புறுவோம்
யாரிடத்தேனும் பகையோம்
சீரியரைச் சேர்ந்திடுவோம்
செல்வம் அறிவென்று கொள்வோம்.

3 சொன்னவாக்குச் சோரவிடோம்
சொலற்குரிய மெய்யே என்போம்
தன்னலம் வேறில்லை என்போம்
தக்கபொது நலமதென்போம்.

4 எத்தொழிலும் இழிவென் றெண்ணேம்
எவர்பணியும் தாழ்ந்து செய்வோம்
சித்திவழிபொறுமை என்போம்
சிறுமைதொழில் இன்மை என்போம்.

5 மருள் அகத்தில் மாற்றிடுவோம்
திருவுளத்தைத் தேர்ந்திடுவோம்
அருள் அகத்தில் பூண்டுகொள்வோம்
திருவருளே துணையாக்கொள்வோம்.

6 எம்முயிரைப்பெரி தென்றெண்ணேம்
எவ்வுயிரும் எமதாம் என்போம்
எம்மையும் நாம் மறந்திடுவோம்
எம்பெருமானைமறவோம்.

7 முத்திநெறி அறிந்திடுவோம்
முத்திநிலை அடைந்திடுவோம்
பத்திநெறி தேர்ந்திடுவோம்
பரமபதம் சேர்ந்திடுவோம்.

8 அன்பே உயிர் என்றுணர்வோம்
அன்பே இன்பம் என்றுணர்வோம்
அன்பே முத்தி என்றறிவோம்
அன்பு சிவம் ஒன்றே என்போம்.

———0———

அன்பகம்
முன்னீர்பள்ளம். } மு. பொ. ஈ.

உ

# அறிவிக்கை.

———o———

இந்நூலாசிரியரால் இயற்றப்பெற்றவை



நீதிநெறித் தாலாட்டு
திருமணவாழ்த்து
நாட்டுப் பெண்கும்மி
தாயம்மையார் சரித்திரம்.
ஆசிரியர் மாக்ஸ்முல்லர்-(ஆசிரியப்பா)

K. S. நெல்லையப்பய்யர்,
ஆ. வி புத்தகசாலை,
சாலிசந்நிதி, திருநெல்வேலி.

நீதிநெறித் தாலாட்டைப்பற்றி வலியக் கிடைத்த அபிப்பிராயங்களில், சிலவருமாறு:—

பாளையங்கோட்டை.
14—1—13

.........தாலாட்டுப்பிரதிகள் 100 அனுப்பும்படி வேண்டுகிறேன். பலர் கேட்கின்றார்கள் என்னிடம் இருந்தவை செலவாயின.

கையொப்பம்.

C. P. சுப்பையாபிள்ளை B. A.,

---

தூத்துக்குடி.
19—2—13

செந்தமிழக்குரவ!

பொன்னவள் முராரிக்குப் பூமிதனைத்
திருக்கழுத்தைப் புகழ்ந்து நல்கும்
நன்னயஞ்சேர் புதுவைவளர் தமிழ்க்குரவ
மணவாழ்த்தும் நயத்தாலாட்டும்
நின்னுரிமையுடன் வழங்கி
நீதிமுறை யுணர்த்துவதை நினைவன்பால்
உன்னுதொறும் உன்னுதொறும்
உவகைபூத்ததன் மயமாய் யுறைகின்றேனே.

தங்களன்புடைச்சிறுவன்,
(ஒப்பம்)
காருடை, சு. சூரியமூர்த்தியாபிள்ளை.

திருச்செந்தூர்.
23—6—14

அன்புள்ள ஐயா,

தங்களின் நீதிநெறித்தாலாட்டுப் புஸ்தகத்தை தங்கள் ஆப்தர் இவ்விடம் பிரம்மஸ்ரீ இராமநாராயணய்யர் மூலமாய்ப் பார்க்கலுற்று மிகவும் சந்தோஷமுற்றனன். ஷை புஸ்தகம் எனக்கொன்று தேவையிருப்பதால் வி. பி. போஸ்டு மூலமாய் என் விலாசத்திற்கு அனுப்பக் கேட்டுக்கொள்கிறேன்.

(ஒப்பம்) ஜி. குருநாதய்யர்,
கோவில் மானேஜர், திருச்செந்தூர்.

தூத்துக்குடி.,
7—12—1912.

மகாகனம் பொருந்திய ஐயா,

தங்களால் இயற்றப்பெற்ற 'நீதிநெறித் தாலாட்டு" என் நண்பர் ஒருவரால் பார்வைக்குக் கிடைத்தது பார்த்து ஆனந்தமடைந்தேன். அது ஆண் பெண் எல்லோருக்கும் நல்லறிவையும் அன்பையும் கொடுக்கத்தக்கது.........இந் நூலை இவ்வளவு தெளிவான நடையிற் செய்த

நன்மைக்காகக் கடவுளைப் பிரார்த்திக்கிறேன். ஒரு பிரதி அனுப்பக்கேட்டுக்கொள்கிறேன்.

தங்கள் அன்புள்ள
சி. த. நாராயணன்.

---

பாலக்காடு,
8—11—17

அன்புள்ள ஐயா,

திருமணவாழ்த்தும் நீதிநெறித்தாலாட்டும் வாசித்துப்பரமானந்தம் அடைந்தேன். எல்லா நூலினும் சிறப்புற்றிருக்கும் திருக்குறளின் கருத்தை குழந்தைகளும் எளிதிலுணருமாறு தாங்கள் செய்திருக்கும் பேருபகாரத்திற்கு எல்லோரும் நன்றிகூறக் கடமைப்பட்டவர்களாயிருக்கிறார்கள். தாங்கள் அனுப்பிய 2 பிரதிகளில் ஒன்றை பெண்கல்விச்சாலையில் உபயோகப் படுத்துவதற்கு அசிஸ்டன்ற இன்ஸ்பெக்டரஸ் அவர்களுக்கு இன்று அனுப்புகிறேன்

அன்பன்,
M. சின்னச்சாமிபிள்ளை,
முன்சிபல் செயர்மன்.

Paramakudi
12—11—'12.

Dear Sir,

Many thanks for the two copies of your "Nidhi Neri Thalattu". I found the songs good and interesting. The language is simple and such as could be understood even by un educated people.

With best compliments,

Yours truly

**(Sd) V. R. Kuppusami Iyer,**

B. A., B. L.

(Dt. Munsiff)

Koilpati
6—11—'12.

Dear Sir,

I beg to acknowledge the receipt of your book entitled 'நீதிநெறித்தாலாட்டு' Every couplet is a true and beautiful summary of each chapter of our sacred Kural.

I hope it will be much appreciated by, and find acceptance with all men and women, on account of its form and matter.

**(Sd) M. Subbiah**, B. A.,

Narsapur,
27—12—'12.

Dear Sir,

Thank you for the copy of 'நீதி நெறித்தாலாட்டு' that you sent me the other day. The whole of our திருக்குறள் is put in a nut-shell. The diction is very simple and best suited to school going girls. I think that the production is one of which the Tamil world ought to feel very proud.

Yours very truly

(Sd) **S. V. Vallinayaham Pillay,**
Chief Mathematics Teacher,
T. H. School.

Ambasamudram,
26th October 1912.

My Dear Brother,

I thank you very much for kindly sending me your book நீதிநெறித்தாலாட்டு. I found it a very interesting and instruc-

tive study. I have asked my daughter to commit to memory some verses.

Yours affectionately,
**(Sd) S. V. Palaniappan.**
(B. A., Pleader.)

2/12 Kalattyappa Mudaly St.,
Vepery, Madras 26th Nov. 12.

Sir,

I beg to acknowledge the receipt of your book 'நீதிநெறித்தாலாட்டு,' which you were kind enough to send me. I went through the whole book; and I find it a useful book to develop the intellectual and moral back-bones of boys and girls.

Yours faithfully,
**(Sd.) S. Alagappa Mudaliar (I.M.S.)**

Dear brother,

I have received the two copies of your latest publication and read them with great pleasure and interest. The

new book ought to be in the hands of every Indian girl or woman who knows the language as it is replete with sound advice in every line and in the simplest language possible.

(Sd) M. S. Purnalingam.
B. A., L. T.

---

Dear brother,

Please accept my thanks for the book you sent me. I went through the book and I am sure it will prove very useful to our young people especially young mothers and sisters.

(Sd) T. S. Sankaralingam (B. A.)

---

ஸ்ரீ ராணியா அச்சுக்கூடம், திருநெல்வேலி.